# "THE VICEROY'S THANKS TO THE CHILDREN OF MADRAS."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever yon can find it,"* But, *"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.*] [God is Love: Knowledge is Power: *Aum.*

**"New Series"** ஸத்தியமே ஜேயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **22.**] **1914**௵ ஆகஸ்ட்ட௴, ஆனந்த௵ ஆவணி௴ [சஞ்சிகை **5.**

## "THE VICEROY'S THANKS TO THE CHILDREN OF MADRAS."

Chiranjivi S. Sadananda Subrahmaniam has received the following letter of acknowledgment communicating the Viceroy's thanks to the Children of Madras, from Sir James H. Du Boulay, Private Secretary to the Viceroy :—

"VICEROY'S CAMP, INDIA,
*29th July* 1914.

"Dear Sir,

"I am desired to acknowledge, with the Viceroy's thanks, your endorsement dated July 24th forwarding a letter from Mr. C. V. Swaminathaiyar to His Excellency's address giving cover to messages of sympathy from the Children of Madras to His Excellency the Viceroy and to the Hon. Diamond Hardinge.

Yours truly,
J. H. DUBOULAY,
*Private Secretary to the Viceroy.*

"S. SADANANDA SUBRAHMANIAM ESQ."

---

### THE CHILDREN'S MESSAGE OF LOVE AND CONDOLENCE TO H. E. THE VICEROY AND CHILDREN.

---

May it please your Excellency,

On behalf of the Children of Madras I beg leave to lay before your Excellency personally the following English transfusion of the Children's Message of Love and Condolence to His Excellency the Viceroy and Children adopted at the assemblage of children on the 14th July on hearing the sorrowful news of the passing away of Her Excellency Lady Hardinge, a Mother beloved of All. The original is published in the "Vivekachintamani Children's Special" which is prefixed as an extra supplement to the July issue of the "Vivekachintamani" the recognised organ of the Children's Day Movement, the aim of which is to imbue the minds of children with those ideals of social service which

are essential to produce a healthy tone and stable character in the natural development of the child-mind which is intuitively active and responsive to every impulse from within and from without. With these few words I beg to subjoin for your Excellency's and Children's information the English transfusion of the Children's Message sending with it a copy of the original in Tamil which is the mother-tongue of the children assembled. With fervent prayers for peace of mind and Power of Grace to bear the trials and tribulations of this life,

LALITALAYA, MYLAPORE. *Madras, S., 24th July* 1914.

I beg to remain your Excellency's most obedient & humble servant,

C. V. SWAMINATHAIYAR, K.S.S.A.

The following is an English transfusion of the Children's Message:—

(*First Verse.*)

"Prompted by Mother-Love H. E. Lady Hardinge our (civic) Mother, took the Innocent Children (of this Great Empire) to her tender heart and bade them rejoice on the Birthday of her Lord, our beloved Viceroy, thus inaugurating 'the Children's Day' on 20th June 1913.

"For this act of kindness on her part, we, the Children, loved her as our own Mother and prayed: "God bless the Founder of the Children's Day." While this prayer was still in our lips and we were celebrating the Children's Day Festival here there and everywhere (in the midst of family surroundings) our Gracious Mother left us all alone on earth,—and not only us, but even th se born of her flesh as dear to her as ourselves—and thinking of her Heavenly Home and Rest, she left even her beloved Lord and husband alone on earth, and like one versed in the mystic art of leaving one body to enter another at one's sweet will and pleasure, she left even her own fleshy tabernacle on earth, passing, in Angel-guise, away to her Heavenly Home and Rest.

We, her children by virtue of the love she bore us in the pursuit of her High Ideal on earth, with the children born of her body, alas! are left motherless on earth to bemoan her loss. Our heart melts with grief and we, poor things, are struck dumb and speechless, deprived of the power to express our sorrow like those dumb creatures that voiceless creep or crawl on earth."

(*Second Verse.*)

"Hardinge My Lord, true-hearted Son of Man (strong in the strength of Grace), thy heart grown great in the sunshine and warmth of Lady Hardinge's Love, now shivers at the cold thought of separation and thy life in tremulous emotion longs for that fellowship on earth, which, come weal or woe, made light the burden of this life to bear.

"Thy genuine grief and sorrow, My Lord, has entered like iron our young and tender hearts; and seest thou, how we trembling quiver, unable to bear the pain of it! We, Children assembled, in our innocence, grieve and suffer the sympathetic pangs of pain and sorrow too deep for us to speak.

"We, the children of school-going age, in meeting assembled, for ourselves and our brothers and sisters at home, our true love and condolence do respectfully tender, *M*y Lord, which pray accept and convey to her who by virtue of the proverb old, 'like mother, like chi'd' inheriting the grace and love of her dearest Mother (now gone to Rest) fills her place in the heart not only of thee, My Lord, but of all who loved her mother and learned to like her for the goodness of her heart, (though the sight of her was denied to us, the Children of Madras, when ye both in royal state our city entered in November last).

"This our prayer grant us, My Lord, that thou shouldst in our name and behalf thus speak to our beloved and bereaved sister, the Hon'ble Diamond Hardinge, whom we all hold dear as the light of our eyes:—

"We, the Children, without intermission pray to God that the Grace of the Lord, in its fullness of Glory may descend on thee and thy children dear and lighten the burden of this sorrow great and consolation grant to the pure hearts that in poignant grief and sorrow mourn the loss of a mother beloved of all.

"This our constant prayer to God; and may the knowledge of this grant thee, My Lord, and thy children dear, consolation great and courage of heart to bear without sinking the burden of this sorrow keen and survive its effect to gently rule over us, is (the substance of) our Address and Message to thee, "our earthly King" and Viceroy beloved of our Sovereign Great."

Here endeth the Address and Message of the Children of Madras to His Excellency the Viceroy and Children as adopted by them in meeting assembled to offer their Love and Condolence on the evening of the 14th of **July 1914.**

(True copy and extract.)

ANANDA MISSION, MADRAS, S. INDIA, *24th July* 1914. (Signed) C. V. SWAMINATHAIYAR, K.S.S.A., *Honorary Secretary,* All-India Children's Memorial Movement.

---

Respectfully submited to His Excellency the Viceroy in person through the Military Secretary to H. E. the Viceroy and Governor-General of India by the twice orphaned child,

(Sd.) **S. Sadananda Subrahmaniam,**

LALITALAYA, MYLAPORE. *Madras S., 24th July* 1914. *Local Secretary of the Children's Movement, on the Anniversary Day of his Mother beloved.*

---

விவேக  சிந்தாமணி

## ON CHILD EDUCATION

### THE TRAINING OF THE SENSES AND OF THE ACCURATE POWERS OF OBSERVATION.

### பாலபோத சிக்ஷை.

### சிரவண-மனனம்.

குழந்தைகளுக்கு வித்தியாப்பியாஸம் செய்வதில் மூன்று அம்சங்களை மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். முதலாவது குழந்தைகளுடைய இந்திரியங்களைப் பழக்கவேண்டும். இந்திரியங்களால் உணர்ந்ததைக் குழந்தைகள் மனதிலிருத்தி ஆராயத்தகுந்த சிக்ஷையும் வேண்டும். அதாவது ஒரு குழந்தை ஒரு நாயைப்பார்த்தால் அதன் உருவம் உறுப்புகள் குணங்கள் இவைகளைக் கவனித்து மனதிலிருத்தச் செய்ய வேண்டும். மனதிற்பட்ட உருவங்களையும் மற்ற குணவிசேஷங்களையும் ஆராய்ந்தெடுத்து விசாரம் செய்யவும் விசாரபுத்தியால் ஆய்ந்ததை நிதானித்துணரவும் போதிக்கவேண்டும். இம்மூன்றையும் (1) இந்கிரிய ஞானம், (2) ஞாபகசக்தி (3) விசார ஞானம் அல்லது நிதானபுத்தியென மூவிதமாகக் குறிப்பிடலாம்.

கண்களைக் காணப்பழக்கல் வேண்டும்.

செவிகளைக் கேட்கப்பழக்கல் வேண்டும்.

இப்படி பஞ்சேந்திரியங்களும் தத்தம் தொழிலை இபற்றப் பழக்கல் வேண்டும்.

உருவங்களையும் உருவபேதங்களையும் வர்ணங்களையும் வர்ணபேதங்களையும் அறிந்து மனதிலிருத்தி அவற்றின் பேதாபேதங்களை விசாரபுத்தியால் தெரிந்து நிதானம் செய்வது கண்களைக்காணப் பழக்குவதாகும். கண் உருப்பு; காண்பது காட்சி; காண்பான் அறிவு; காண்பொருள் கண்ணுக்குப் புலனுமவை.

அறிவுரு என்றது எப்போதும் ஆனந்த ஸ்வரூபம். குழந்தை காணக்கற்றதும் காட்சியைக் கண்டுகளிக்கும். மூன்றுவது மாசம் குழந்தை தாய்முகம் காணக்கற்கும் என்பர். தாய்முகம் காணக்கற்ற குழந்தை அது காணும் காட்சியைக் கண்டுகளிக்கும். அப்புறம் விளக்கைக் கண்டு களிக்கும். அதன்பின் வடிவத்தைக் கண்டுகளிக்கும். அப்புறம் வர்ணத்தைக் கண்டு களிக்கும். இப்படி குழந்தை புதிதாய்க் கற்பன வெல்லாம் அதன் மனத்தில் ஞாபக சக்தியாக அமர்ந்திருக்கும். இதுதான் மனோவிருத்தி. இந்த மனோவிருத்திதான் விசார ஞானத்துக்கு ஆதாரம். விசாரஞான மிருந்தால்தான் நிதானபுத்தி யுண்டாகும். (Reasoning and Judgment) விசார ஞானமும் நிதானபுத்தியும் உபாயமாயிருக்கும். இந்திரிய ஞானமும் ஞாபகசக்தியும் விசேஷமாயிருக்கும்.

இந்திரியஞானம் முதிர்ந்தால் பிரபஞ்ச ஞானம் முதிரும். பிரபஞ்சஞானம் முதிர முதிர ஞாபகசக்தி யதிகப்படும். ஞாபகசக்தி யதிகப்பட்டால் விசாரஞானம் ஏற்படுவது சுலபம்: விசாரஞானம் ஏற்பட்டால் நிதானபுத்தி யுண்டாகி அது நிலைத்திருக்கும். நிதான புத்தி ஸ்திரப்பட்டால் எதையும் திராசுமுனை போல் நடுவுநிலையாயிருந்து நிதானம் தப்பாமல் தீர்மானிக்கும் சக்தி யுண்டாகும். இது தான் "கற்றதோர் கல்விவும் மனப்பழக்கம்" என்று சொன்னதற்கு அடையாளம்.

குழந்தைகளுடைய இந்திரியங்களைப் பழக்குவதற்கு ப்ரோபெல் ஏற்படுத்திய 'கிண்டர் கார்டன்' முறையை அனுசரிப்பவர்கள் அவர் எப்படி உருவம், வடிவம், வர்ணம், கடினம், மிருதுத்துவம் முதலானவற்றைப் போதிக்க ஏற்பாடு செய்திருக்கிறார் என்பது விளங்கும். இதற்குப் பொருள் பாடம் (Object lesson) என்று சொல்லுகிறார்கள். இதையே புலன் சிக்ஷையென்றும் சொல்லலாம். ஏனெனில் புலனறிவு புலப்படவே இந்தப் 'பொருள் பாடங்கள்' ஏற்பட்டவையாக விருக்கின்றன.

இந்திரியங்களைப் பழக்கினபின் பொறி-புலன் இரண்டுக்குமுள்ள உறவுதானே விளங்கும். பொறியென்பது அந்தக்கரணங்களில் ஒன்று. புலன் என்பது புற உறுப்புக்களைக் குறிக்கும்.

இந்திரியங்களை நன்றாகப் பழக்கினபின் புலனறிவைத் தீரத்தெளிய ஆராய்ந்து நிதானித்து உள்ளத்திருத்தும் சக்தி பொறிகளைப் பழக்குவதாகும். இது குணங்குறி கண்டு உவத்தல் என்னப்படும். இதனால் "Accurate powers of observation" சித்திக்கிறது.

"Training of the Senses" என்று சொல்லும் இந்திரியப் பயிர்ச்சியைப் பொதுவாய்ச் சிரவணசக்தி, யென்று சொல்லுவர்.

"Accurate Training of the powers of observation" என்று சொல்லும் பொறியின் பயிர்ச்சியை மனனம் என்று சொல்லுவர்.

இந்த இரண்டும் குழந்தைகளுக்கு இயல்பாகவும் (Instinctive) தெய்விகமாகவும் (Intuitive) அமையப்பெற்றுள்ளன. அவைகளைப் பழக்கத்துக்குக் கொண்டுவந்து தேற்றுவதே பயிர்ச்சி யென்னப்படும்.

குழந்தைகளுக்கு அறியும்சக்தி தானாக அமைந்திருக்கிறது. அந்த சுபாவசக்தியை நாம் பிரகிருதி தர்மத்துக்கு விரோதமின்றிப் பழக்குவதே மிகவும் மேலான வித்தியாப்பியாஸமாகும்.

"பாலபோதம்" என்பது குழந்தை யறிவைக்குறிக்கும். அது எப்போதும் அறிய முயன்றுகொண்டேயிருக்கும். அந்த முயற்சிக்கு அனுகூலமான சாதக சாதனங்கள் அமைத்து வைப்பதுதானே பெற்றோருடையவும் உபாத்தியாயருடையவும் கடமையாகும். தோட்டக்காரன் செடிவைத்துப் பயிர் செய்தால் செடியினுடைய சுபாவமறிந்து அது வளர்வதற்கு வேண்டிய சாதகங்களையமைத்து

இடையூறுயுள்ள ப்ரதகங்களைக் களைபிடுங்கி யெறிகிறான். அப்படியே குழந்தைகள் அறிவு விரிவதற் கனுகூலமான சாதகங்களைச் செய்து பாதகமான இடையூறுகளை நீக்குவது பெற்றோர், போதகர் கடமையாகும். ஆதலால் இம்முறைக்கு ப்ரோபெல் "கிண்டர்கார்டன்" (Child-Garden)"பாலபிருந்தாவனம்" என்று பொருள் படும் நாமகரணம் சூட்டினார்.

---

## ON FEARLESSNESS.

## அபயம்.

"அஞ்சினேன்; அபயம்!" என்றார் உண்மைத் தொண்டராம் ஒரு பக்தர். கடவுளிடத்தில் அன்பு பூண்டு தொண்டு செய்யக்கற்ற தொண்டர்களும் "அஞ்சினேன்; அபயம்!" என்றால், மற்றவர்களுக்குக் கேட்பானேன். "அஞ்சினேன்" என்றால் பயந்து போனேன் என்று அர்த்தம். "அபயம்!" என்றால், அந்த பயம் நீங்க "அஞ்சாதே!" யென்று திடம் கூறல் வேண்டும் என்று அர்த்தம்.

சிந்நாட் பல்பிணிப்புல்லுடம்பாம் தேஹத்தை நம்பி "தேஹம் நான்" என்று தேஹத்துக் குச்சுபாவமான அற்பவாழ்வு,பலநோய்களுக்கு ஆளாதல், "புன்புலால் யாக்கை" யென்றபடி ஈனமான மாம்ஸபிண்டமாகிய உடம்பை என்றும் அழியாததும் எல்லா சுகபோகங்களுக்கும் ஆதாரமும் ஆதேயமுமாயிருக்கிற "நான்" என்னும் சத்புருஷ சப்தத்தோடுசேர்த்து இந்த தேஹம் நான் என்று மயங்கி தேஹத்துக்கு வரும் துன்பங்களை யெல்லாம் தன்னதாக பாவித்து துக்கசாகரத்தில் மூழ்கி துன்ப மூட்டையைச் சுமந்துகொண்டு வழிநடக்க முடியாமல் தவிக்கிற ஏழைகளாம் ஜீவன்கள் பயம் என்கிற பிசாசினால் பிடித்து ஆட்டப்படுகிறார்கள்.

சோற்றுக்கில்லாமற் போனால் என்ன செய்கிறது? என்கிறபயம் எல்லாருக்கும் உண்டு.

அந்தபயம் நீங்கக் கைப்பொருளிருந்தால், நோவுநொடி வந்தால் என்ன செய்கிறது? என்கிற பயம் பிடித்துக்கொண்டு உபாதி செய்யும்.

அந்த பயத்துக்கிடமில்லாமல் திடகாத்திரமிருந்தால், "ஐயோ! வயதாகிறதே மூப்பு (கிழத்தனம்) வந்தால் என்ன செய்கிறது?" என்கிற பயம் பிடித்துக்கொண்டு சஞ்சலத்தை யுண்டுபண்ணும் பசி, பிணி, மூப்பு என்கிற இந்த மூன்று பயமும் நீங்க தேறுதல் கூறப் பெற்றாலும், "ஐயோ! மரணம் வந்தால் என்ன செய்கிறது?" என்று மனம் ஏங்கிநிற்கும்.

பசி, பிணி, மூப்பு, மரணம் ஆகிய இந்த நான்கும் ஒன்றுவிட்டால் ஒன்று ஜீவனைப் பற்றிக்கொண்டு தீராத பயத்தை யுண்டுபண்ணும்.

புருஷார்த்தங்கள் நான்கையும் கெடுக்க இந்த நான்கு பயகாரணங்களும் போதுமானவை.

பசியினால் பீடிக்கப்பட்டவனுக்கு தர்மம் இல்லை.

பிணியினால் பீடிக்கப் பட்டவனுக்குப் பொருள் இல்லை. அவனுக்குக் கைப்பொருள் ஏராளமாயிருந்தாலும் அனுபவிக்க முடியாமையால் இருந்தும் இல்லையென்றே சொல்ல வேண்டும்.

மூப்பு மேலிட்டவனுக்குக் காமம் இல்லை.

மரண பயமுள்ளவனுக்கு மோக்ஷமில்லை.

இப்படியாக தர்மார்த்த காமமோக்ஷம் என்கிற புருஷார்த்தங்கள் நான்கும் பசி, பிணி, மூப்பு, மரணம் என்கிற அச்சப்பேய்களால் பீடிக்கப்பெற்றவர்களுக்கு இல்லையாகும்.

புருஷார்த்தங்கள் இல்லையாகவே மனுஷ ஜன்மம் பாழ்த்துப்போகிறது. மனுஷ ஜன்மம் பாழ்த்துப் போனால் "நரகவேதனை" யென்று சொல்வது உடனே சித்திக்கும். அழுகிறபிள்ளைக்கு வாழைப்பழம் காட்டுகிற தோரணையாக தற்காலம் அவனைப் பீடித்துள்ள நரகவாதனையைப் போக்கும் வழி தோன்றாமையால் அதனாலுண்டாகும் துக்கத்தை சமனம் செய்யும்பொருட்டு நரகமென்பது மரணாந்தத்தில் (இறந்தபிறகு) லபிக்கும் ஓர்

வாசஸ்தலமாகக் கட்டுக்கதை கட்டிவிட்டிருக்கிறார்கள். அண்ட, பிண்ட, சமத்துவ விசேஷத்தால் Macrocosm என்றுசொல்லும் பிரம்மாண்டத்திலுள்ள தெல்லாம் Microcosm என்று சொல்லும் மானிட பிண்டத்திலுமுண்டு. அச்சம் அல்லது பயம் என்பது ஒன்றைக்கண்டு நடுங்குந்தன்மை.

அறிவுக்கு லக்ஷணமாயுள்ளவை திரிபுடியென்று சொல்லும் காண்பான், காட்சி, காண்பொருள் ஆகிய மூன்றுமாம். இம்மூன்றே அறிவான், அறிவு, அறிபொருள் ஆகும். மற்றப்படியுள்ள அஹப்புறவேற்றுமை யெல்லாவற்றிற்கும் இம்மூன்றுமே காரணமன்றி வேறு காரணமில்லை.

சிறு குழந்தைகள் விளக்குவெளிச்சத்தில் தோன்றும் தம் நிழலைக்கண்டு விளையாடுவதைப் பார்த்திருக்கலாம். சிலகுழந்தைகள் தாம்ஆடத் தம்நிழல் ஆடுவதைக்கண்டு சிரித்து விளையாடும். சில குழந்தைகள் அதையே பார்த்து பயந்து நடுங்கும். இது அக்குழந்தைகளின் பூர்வஜன்ம வாசனையினாலுண்டான மனோபக்குவத்தைப் பொறுத்தது.

விளக்குவெளிச்சத்தில் காணும் பிரதிபிம்பமாகிய நிழலைப்போல், ஞானவிளக்காகிய அறிவு பிரகாசிக்க அந்தப்பிரகாசத்தில் மனோபாவம் என்கிற நிழல் தோன்றும். இதற்குத்தான் "Mental images" என்று சொல்கிறது. இந்த மனோபாவங்கள் உண்டாக இருள், ஒளி என இரண்டு அம்சங்கள் தேவை. உண்மையில் மனவிருள் என்பது மனமாகிய இருள் எனப்பொருள் படும். ஏனெனில் மனதுக்கு ஸ்வயம்பிரகாச லக்ஷணமில்லை. சந்திரனைப் போல் இரவல் வெளிச்சத்தில் பிரகாசித்துக் கொண்டு பிறபொருள்களையும் நிலவொளி போல் மங்கலாக விளங்கச்செய்யும். ஆகையினால் தான் சந்திரனை மனசுக்கு உவமானமாகச் சொல்வது. உண்மை விளக்கம் பெற்றோர் சந்திரனை மனதின் அதிஷ்டானதேவதை யென்று சொல்லித் துதிப்பர். அப்படி யென்றால் மனதில் அறிவு பிரதிபிம்பிக்க அதனாலுண்டாகும் வெளிச்சம் நிலவொளி போன்றதால் அந்த நிழலொளிக்குக் காரணமான சந்திரனை மனதில் வசிக்கும் தேவதை (அறிவு வெளிச்சம்) என்று தொழுவர்.

இருளைக் கண்டு அஞ்சுவதெல்லாம் அவ்விருளில் காண்பொருள் நிச்சயமாக உணரப்படக் கூடாமையினாலேயாம்.

குழந்தைகளுக்குச் சொல்லும் ஔவையார் கதைகள் உண்டு இருட்டில் வாசம் செய்கிறவர்களான திருடர்களை மனோதர்ம முணர்ந்த ஒரு ஔவையார் தன்னுடைய புத்தி சாமர்த்தியத்தால் பயந்தோடச் செய்ததற்கு உதாரணமாக ஒரு கதை சொல்வதுண்டு. அதாவது:—

ஒரு நாள் நள்ளிருளில் (நடு ராத்திரியில்) இரண்டு பெரிய திருடர்கள் ஒரு அம்மையார் வீட்டில் திருடுவதற்காகச் சென்றார்கள். அந்த வீட்டில் அபலையான அம்மையாரும் அவர் வளர்த்துவந்த சிறு குழந்தைகளும் தவிர வேறு புருஷத்துணை யாருமில்லை. ஆண்பிள்ளைகள் துணையில்லாவிட்டாலும் அந்த அம்மையார் தன்னுடைய அறிவே குருவாகக்கொண்டனுஷ்டித்து வந்த சிக்ஷா, தீக்ஷா, விரதமஹிமையால் கிராதர்களான கொல்லுக்கொலைக்கஞ்சாத திருடர்களையும், மனோதர்மத்தையறிந்த தன் இஷ்டசித்தி சாமர்த்தியத்தால், அவள் வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் நடுநடுங்கி யோடச் செய்துவந்தார். அது எப்படியெனில், ஒரு நாள் இரு திருடர்கள் சேர்ந்து நின்று வீட்டில் புகும்படி யோஜித்துக்கொண்டிருக்கையில் அம்மையார் அதைக் கண்டு, குழந்தைகளை யெழுப்பிக் கதைசொல்வார்போல், "இரட்டைப் பனைமரம் நிற்குமாம்போலே போலே" யென்று சொல்லி, "தெரிந்ததா, தெரிந்ததா" என்று கேட்டுக்கொண்டிருந்தார்.

திருடர்கள் அதைக் கேட்டு அந்த அம்மாள் சிறிதும் பயங் கொள்ளாது "இரட்டைப் பனைமரம் நிற்குமாம் போலே, போலே, தெரிந்த

தா ?" என்று சொல்வதைத் தாம் அங்கு வந்திருப்பதை யுணர்ந்து அந்த அம்மாள் அவர்களைப் பிடிப்பதற்காக உளவு சொல்லிக் கொடுக்கிறார்களென்று நினைத்து தாங்கள் பிடிபடாமல் தப்பி யோடினால் போதும் என்று அஞ்சி ஓட்டம் பிடித்துவிட்டார்கள்.

இன்னொரு நாளிரவு திருடர்கள் தாம் நின்று கொண்டிருந்தால் உருவம் தெரிகிறதென்று இருட்டில் பதுங்கியிருந்து இலக்குப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அம்மையார் குழந்தைகளை எழுப்பிக் கதை சொல்லுவார்போல் பாவனை காட்டி "ஆந்தை விழிக்குமாம் போலே, போலே! தெரிந்ததா?" என்று அடுத்தடுத்துக் கேட்டுக்கொண்டிருக்கத் திருடர்கள் நாம் இருட்டில் பதுங்கியிருந்து ஆந்தை போல் விழிப்பதைக் கண்டு உளவு சொல்லிக் கொடுக்கிறாளென்று நினைத்து இன்றைக்கும் நாம் தப்பினால் போதும்! காத்தவராயன்தான் நம்மைக்காப்பாற்றவேண்டுமென்று சொல்லிக் கொண்டு ஓட்டம் பிடித்து ஒரே ஓட்டமாய் ஓடிவிட்டார்கள்.

அவர்கள் தேஹபலம் படைத்தவர்களாயிருந்தாலும் தேஹோஹ பாவனையில் வளர்ந்தவர்களாதலால் தேஹத்துக்கு அநர்த்தம் வருமென்று கண்டதும் அஞ்சி ஓடிவிட்டார்கள். இப்படியாக தேஹ பலத்திலும் மனோபலம் பெரியது. ஆனால் மனோபலத்தைக் குலைப்பதற்கு பயத்தைப்போல் மிருத்யு (எமன்) அதற்கு வேறில்லை. கவலை யென்பதும் பயத்தினா லுண்டாகும் ஒருவித மனோசஞ்சலமன்றி வேறல்ல.

"மனக்கவலை பலக்குறைச்சல்" என்கிற பழமொழி யேற்பட்டது இதனாலேதான். பயமில்லாவிட்டால் கவலையில்லை. இதற்கு உதாரணமாக ஒரு கதை சொல்வார்கள். அது என்னவெனில்:—

ஒரு பிள்ளையாண்டான் நிர்விசாரமாக வளர்ந்து மதர்த்துத் தடித்து மதோன்மத்தனாயிருந்தான். அவனைப் பெற்ற தாயார் அறிவிலியாதலால், பிள்ளையின் திடகாத்திர வலியைக் கண்டு சந்தோஷப்பட்டுச் செருக்குற்றிருந்தாள். அறிவுடையவரும் விவேக விற்பன்னருமாகிய தகப்பன், பிள்ளையாண்டான் இப்படி மௌட்டியத்தில் வளர்ந்து கொழுக்கவைத்த காளை மாதிரி வெறுந்தடியனாய் மிருகப்பிராயமாய் இருந்து வருகிறானே யென்று சிந்தைநொந்து வந்தார். இது அவர்பத்தினியாருக்கு வேறு விதமாகப்பட்டது. 'தனது பர்த்தா பிள்ளையினிடத்திலுள்ள அசூயையினாலோ, தன்னைப் போல் அன்புவைக்காததினாலோ இப்படி வீணே தன் தங்கமான பிள்ளையைக் கண்டு வெறுப்படைகிறாரென்று நினைத்து வந்தாள். மனதில் ஒன்றைச் சிந்தித்து வந்தால் சிந்தை முதிர்ந்த விடத்து அது எப்படியும் வெளியாகி விடும்.

"அடுத்தது காட்டும் பளிங்கேபோல் அஹம்
கடுத்தது காட்டும் முகம்."—என்றபடி

அஹத்தினழகு முகத்தில் விளங்குமானாலும் அதைப் பார்த்துணரும் சக்தி எல்லாருக்குமே யுண்டாகமாட்டாது.

கண்ணாடியின் முன் நிற்கும் குழந்தை அங்கே காணும் நிழலை வேறொரு குழந்தை யென்று கண்டு மருண்டு விளையாடும். அது போல் முகவிலாசத்தை உள்ளபடி யறியாது விபரீதார்த்தம் செய்து வில்லங்கம் வளர்ப்பார் உலகவாசனை படிந்தோர். தன் மனதை யடக்கியாளத் தெரிந்த அந்தர்முகலக்ஷியம் சித்தித்த தீரர்களே முகத்தைப் பார்த்து அஹத்தை யுணர்வார்கள்.

இப்படியாக தம்பதிகளிருவரும் ஒரு நாள் தங்கள் மனதிலுள்ளதைச் சொல்லி கலந்து பேசிக்கொள்ள தாயார் பிள்ளையைப் பற்றி பெருமிதமாகச் சொல்லிக்கொண்டாள் தகப்பனார் அவளுக்கு அவளுடைய தப்பெண்ணத்தை ரூபித்துக் காட்டவேண்டுமென்று மறுநாட் காலையில் தான் திடீரென்று அவசர காரியமாக கிராமம் விட்டு பட்டணம் போகவேண்டியிருப்பதால் பிள்ளையாண்டானை வைத்துக்

கொண்டு வீட்டை சாவதானமாகப் பார்த்துக் கொள் என்று தாக்கீது செய்துவிட்டு ஊருக்குப் போய்விட்டார். குறித்த தவணையில் பர்த்தா வராமையால் குடும்பச் செலவுக்கு அவர் வைத்துவிட்டுப்போன கைம்முதல் செலவாகிவிட்டது. பிள்ளையாண்டான் வெறும் சாப்பாட்டு ராமனுயிருந்தான்.

தாயார் குடும்பச் செட்டில் கைதேர்ந்தவளானதால் தன்னுலான சமர்த்தையெல்லாங் கொண்டு பிள்ளையாண்டானுக்குக் கவலை யுண்டாகாமற்றுனே குடித்தனத்தை நடத்திக் கொண்டு போனுள். ஊருக்குப் போனவர் ஒரு மாசம், இரண்டுமாசமாகியும் திரும்பிவந்தாரில்லை. கடைசியில் சமைப்பதற்கு உப்புக் கூட இல்லாமல் தட்டலாயிற்று. உப்பில்லாமற் சமைக்கும் வித்தை கற்றுளில்லை. கற்றிருந்தாலும் பிள்ளையாண்டான் உப்பில்லாப் பத்தியமிருப்பானென்று தோன்றவில்லை. ஆகையால், பொறுக்கக்கூடியமட்டும் பொறுத்துக் கடைசியில் வேறு விதியில்லாமையால் நெல்லூர்க் காளை மாதிரி வளர்ந்திருந்த புத்திரனையழைத்து "அப்பா, சமைக்கிறதற்கு உப்பில்லையே! என்ன செய்கிறது!" என்று சொன்னுள். "அப்படியா, உப்பில்லையா! என்ன செய்கிறது? எனக்கும் தெரியவில்லையே!" என்றுன் பையன்.

"வெளியிலே போய் ஒரு காசுக்காவது உப்பு வாங்கிவா, நாளைக்கு உன் தகப்பனர் வந்தாலும் வந்துவிடுவார். இன்றைப் பாட்டைப் பார்க்க வேணுமே!" என்றுள் தாயார்.

"அப்படியா!" என்று சொல்லிப் பிள்ளையாண்டான் வெளியே போனுன். ஒரு காசுக்கு உப்பு வாங்கிக்கொண்டு வந்து போடத் தப்பில்லை. அதே கவலையாக ஏங்கி யுட்கார்ந்து போனுன். இரவு எட்டு மணிக்கு உப்பில்லாமல் தானே வாடி வதங்கி தேஹம் சருகுபோல் உலர்ந்து விடுவந்து சேர்ந்தான். தாயார் பார்த்துத் திடுக்கிட்டாள். "என்னடா அப்பா! இப்படி துரும்பாப் போய்விட்டையே! என்ன சம்பவித்தது உனக்கு?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை: அந்த உப்புத்தான் அகப்படவில்லை. அதுதான்: வேறென்றுமில்லை!" யென்றுன் பிள்ளையாண்டான்.

தன் பர்த்தாவின் அபிப்பிராயம் நிஜமென்றும் தான் கொண்டது தப்பு என்றும் அவளுக்கு அப்பொழுதுதான் பட்டது. "ஐயோ! பாவி! என் அறிவீனத்தால் பிள்ளையையும் பாழாக்கி பர்த்தாவுக்கும் வியாகூலத்தை யுண்டுபண்ணி அவரை வீட்டை விட்டோடும் படிச் செய்தேனே!" யென்று உள்ளன்பால் மனம் கசிந்து உள்ளமுருக வருத்தப்பட்டழுதாள். அவள் மஹாபதிவிரதையானதால் அவளுடைய மௌட்டியமே காரணமாக அவளை விட்டு நீங்கிய பர்த்தா, அவளுக்கு விவேகம் வந்ததும் ஞானபானுபோல் மறுநாட் காலையில் வந்து சேர்ந்தார். அவளும் திருந்தி, அவள் மூலமாய் பிள்ளையும் திருந்தி உருப்படலானுன்.—என்பது கதை.

இப்படியாக மனதைப் பண்படுத்திப் பயிர் செய்து பலனை யனுபவிக்கத் தெரியாத கற்றுக் குட்டிகள் ஏட்டுப் படிப்புப் படித்துவிட்டு நிலத்தைப் பண்படுத்தும் வித்தையை சிலாகித்துப் பேசும் வார்த்தைகள் அந்தமூடத்தாய் பேசிய வாய்மதம்போல் பொய்மதமாகிப் பிராணஹானியை விளைவிக்கும்.

விவேகம் என்பது சிந்தையென்னும் சுரங்கத்தினடியில் கிடக்கும் மணி. ஆகையால்தான் அதற்குச் சிந்தாமணி யென்று பேர் வந்தது. பயம் என்கிற பூதம் அதைக் காத்துக்கொண்டிருக்கிறது. அந்த பூதப் பிரேதபேதாள பைசாசக் கூட்டத்தைக் கண்டு அஞ்சாதே யென்று அபயம் கொடுக்கும்கை ஒன்றேயுண்டு. அதைத்தான் "அபயஹஸ்தம்" என்று சொல்கிறது அதுதான் நம் ஆனந்தத்தாயின் வலது அவள் கையை விரித்து "அஞ்சாதே நானிருக்கிறேன்" என்கிற பாவனையாக அபயவரதம் கொடுப்பதை அறியாதார் விவேகம் போதிப்பது குருடனுக்குக் குருடன் வழி காட்டுவது போலே யாகும்.

"குருடரும் குருடரும் குருட்டாட்டமாடிக்
குழி விழுந்தற்றே"

யென்று ஓதியுள்ளார் உண்மை யுணர்ந்த மஹான்களும்.

## PROVERBS AS AIDS TO CHILD-STUDY.

### பாலபோதசிக்ஷா ஸாதனம்.

### பழமொழி விளக்கம்.

நல்மக்கள் பெறுதலை, உலகவாழ்க்கைக்கும் ஹிந்துக்கள் கொள்கைக்குள் பரலோகத்தில் நம்மை நிலைநிறுத்தி வைப்பதற்கும் ஸாதனமாக எடுத்திருக்கிறபடியால் இங்கே மக்களைக் குறித்துள்ள பழமொழிகளைச் சற்று விரித்துச் சொல்லுவோம். பாலபோத சிக்ஷைக்கு இது அவசியம். ஏனெனில் "மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்" என்றிருக்கிறபடியால் என்க. நல்மக்களை அடைய நல்மனையாள் அவசியம் என்றும், தாயின் குணம் பிள்ளைக்கு என்பதையும், தாய் வளர்ப்பதின்மேரில் பிள்ளையின் குணம் படியும் என்பதையும், கெட்ட மக்கள் யார் என்பதையும், மக்கள் தாய்தந்தைகளுக்கு நடந்துகொள்ள வேண்டியதையும் இன்னும் அநேக விஷயங்களையும் நமது நாட்டில் மக்களையனுசரித்து வந்திருக்கும் பழமொழிகள் எடுத்துக்காட்ட நாம்காணலாம். ஹிந்துக்கள் எப்பொழுதும் பந்துப்பிரியர்கள். சிறு குழந்தைகளிடம் ஸ்வபாவமாகவே பிரீதியுள்ளவர்கள். அன்றியும் புத் என்னும் ஒரு நரகம் பரலோகத்திலிருக்கிறதென்றும், அந்த நரகத்தில் வீழாமல் தந்தைதாய்களை ரக்ஷிப்பது, புத்திரன் இவர்களுக்கு இவர்கள் காலஞ்சென்ற பிறகு செய்யும் சடங்குகள் என்றும் ஒரு பலமான கொள்கையை இவர்கள் கொண்டிருக்கிறார்கள். புத்திரன் என்னும் பதத்திற்கு அருத்தங்கூட புத் என்னும் நரகத்திலிருந்து ரக்ஷிக்கப்பட்டவன் என்பதாம். ஆகவே ஸ்வபாவத்தாலும், சாஸ்திரத்தின் அமைப்பாலும் ஹிந்துக்கள் எப்பொழுதும் குழந்தைகளை அடைய அதிக ஆசையுள்ளவர்கள் என்பதையும் எடுத்துக் கூறவேண்டுமா. எல்லாருக்குமே மக்கள் பாக்கியம் படைக்க எப்பொழுதும் அவா இருப்பது வெகு சகஜம். மனுஷ்யவர்க்கத்துக்கு மாத்திரமல்ல. பசு பட்சி ஜாதிகளுக்கும் இந்த அவா உண்டு. இப்படி ஈசுவரன் வைத்திருப்பது அந்தந்த வர்க்கங்கள் நசித்துப்போகாமல் எப்பொழுதும் அபிவிருத்தியாய்க் கொண்டிருக்கும்படி. தகப்பன் தாய்மார்களும் அந்த வம்சத்தைச் சேர்ந்தவர்களும் பரலோகத்தில் சுகமாய் வாழ்தல் ஒரு வம்சத்தில் பிறந்த புத்திரன்செய்யும் சிராத்தம் முதலிய சடங்குகளால் என்று ஹிந்துசாஸ்திரங்கள் ஏற்படுத்தியிருக்கிறபடியால் இவர்கள் மற்ற சாதியார்களைவிட மக்கட்பேற்றில் அதிக ஆசைபாராட்டியிருப்பதற்கு ஒரு காரணமாயிற்று. அநேகர் ஒரு சிறு குழந்தைக்காக காசி ராமேச்வரம் போவதையும், கோவில் குளங்கள் கட்டுவதையும் வெட்டுவதையும், அசுவதப் பிரதிஷ்டை நாகப் பிரதிஷ்டை முதலிய தர்மங்கள் செய்வதையும் நாம் பார்த்திருக்கிறோம். அன்றியும் ஸ்த்ரீயும் புருஷர்களும் ஒரு குழந்தைக்காக அநேகவித ஔஷதங்களை "பிள்ளை ஆசை பவ்வீயைத்தின்று" என்ற பழமொழிப் பிரகாரம் சாப்பிடவும் நாம் பார்த்திருக்கலாம். இவ்வளவுமட்டும் பொதுவாய் நமக்குள்ளிருக்கும் மக்களைப்பற்றிய ஆசையையும் கொள்கையையும் ஒருவாறு நாமிங்கு எடுத்துரைத்து இனி மக்களைச்சார்ந்த பழமொழிகளின் விளக்கத்தைச்சொல்ல ஆரம்பிப்போம்.

(1) சிறு குழர்ந்தையில்லா வீடும் வீடல்ல, சீரகமிட் டாக்காக் கறியும் கறியல்ல.

நாம் சாப்பிடும் போசன பதார்த்தத்தை பரிமளிக்கச்செய்ய சீரகம் எவ்வளவு சாதகமோ அதுபோல நமது ஜன்மத்தை இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் மணக்கச்செய்ய குழந்தை அவசியம் என்பதாம். இந்தப் பழமொழியின் முதல்பாகத்தின் அருத்தத்தை வடமொழியில் வெகு அழுத்தமாயும் தெளிவாயும் "சூன்யம் அபுத்ரஸ்ய கிருஹம்"—சிறு குழந்தையில்லா வீடும் வீடல்ல என்று சூத்ரகர் என்ற கவி அநேக அருத்தத்தில் எடுத்துக்காட்டியிருக்கிறார். சிறு குழந்தைகளை எடுத்து வைத்துக்

கொண்டு அவர்களுடன் கொஞ்சிக் குலாவி அவர்களை ஆதரிப்பதால் அநேகவித நற்குணங்கள் ஒருவனுக்கு உண்டாகின்றனவென்பதும், அவ்வித நற்குணங்கள் மற்றவர்களிடத்தில் ஒருவன் அதிக பூததயை முதலிய உத்தம குணங்களைக்காட்ட சாதகமாகின்றன என்பதும் சில தத்துவவாதிகளின் கொள்கை. அது அநேகமாய் யதார்த்தந்தான். 4, 5 குஞ்சு குழந்தைகளுடனிருப்பவன் கொஞ்சம் அதிகமாகப் பச்சாதாபம் தயை தாக்ஷண்யம் உள்ளவனுகவேயிருப்பான் என்பது அநேக விஷயங்களில் வெளியாகும். குழந்தைகள் 5-வயது வரையில் தேவஸ்வரூபம் எனவும் சிறு குழந்தைகள் நமது வீட்டிலிருந்தால் தெய்வமேயிருப்பதாகவும் ஹிந்துக்கள் ஓர்கொள்கை பாராட்டுகிறார்கள். இதற்கு ஒரு சிறு கதையுண்டு. மலையாளதேசத்தில் அனந்தசயனம் என்றொரு ஸ்தலமிருக்கிறது. அந்த ஸ்தல புராணத்தில் நாமிதனடியில் எழுதப்போகிற கதை வெகு விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. நமக்கு தற்காலம் இந்தக் கொள்கையை விளக்குவதற்கு வேண்டியமட்டும் அதை இங்கு சுருக்கிச் சொல்லுவோம் :—

தக்ஷிண தேசத்தில் ஒரு பிராமணனிருந்தான். அவன் சிவபூஜா துரந்தரன். கொஞ்சம் தனிகனுகையால் அடிக்கடி அவன் வயல் வெளிகளுக்கும் மற்ற விஷயங்களுக்கும் வெளியில் அலைந்து திரிந்து 15, 20 நாழிகைக்கு வீடுவருவது வழக்கம். வந்ததும் ஸ்நானம் முதலானதுசெய்து பூஜைக்கு உட்காருவான். அவனுடைய பத்தினி புருஷன் வரும் முன்னமே பூஜைக்குவேண்டிய சகல சாமான்களையும் எடுத்து தயார்செய்து வைத்திருப்பாள். இவ்விருவர்களுக்கும் செல்வக்குழந்தை ஒன்றுண்டு. அதற்கு விளையாட்டு வெகு அதிகம். எப்பொழுதும் துருதுரு என்று ஊர்ந்து கொண்டேயிருக்கும். அரை நாழிகையாவது விளையாடாமல் வீண்பொழுது போக்காது. இந்தப் பிள்ளையினிடம் அந்த வேதியருக்கும் அவர் மனைவிக்கும் அசாத்திய வாஞ்சை; நியாயமாய் அதிருக்கவேண்டியது தானே. இந்தச்சிசு தகப்பனர் பூசைபண்ணும் காலத்தில் எப்படியாவது தவிழ்ந்துகொண்டு வந்துவிடும். பூஜையின் மத்தியில் புகுந்து பாத்திரங்களை எடுக்கிறதும் புஷ்பத்தை அளைகிறதும் தண்ணீரைக் கொட்டுவதுமான பலவித சில்லரை உபத்திரவங்கள் செய்யும். ஒவ்வொரு சமயத்தில், எங்கு புருஷன் பூஜை பங்கப்படுமோ என்று அதன் தாயார் அதை ஓடிவந்து எடுப்பாள். ஒவ்வொரு சமயத்தில் தகப்பனர் போனல் போகட்டும் விட்டுவிடு, குழந்தை தானே, அதனிஷ்டப்படி விளையாடட்டும் என்று தடுத்துவிடுவார். இம்மாதிரி நடக்கும்.

இப்படி யிருக்கும்போது ஒருநாள் அந்த வேதியர் வெகு நாழிகைசழித்து வீடுவந்தார். பசிகொஞ்ச மதிகம். பொழுதுபோய்விட்டது. இனிமேல் பூஜைபாகி அவர் புசிக்க வேண்டும். ஆகையால் வெகு அவசரமாய் அவர் ஸ்நானம் முதலியவைகள் செய்துவிட்டு பூஜைக்கு உட்கார்ந்தார். அன்றையதினமும் தனது வழக்கப்படி குழந்தை விளையாட வந்துவிட்டது அந்தசமயத்தில் வேதியர் மனைவி அடுக்குளில் வேறுவேலையாயிருந்தபடியால் குழந்தையை தூக்க வெளியில்வரவில்லை. நடுஉள்ளிலேயே யிருந்துவிட்டாள். அபிஷேகமாய் அர்ச்சனைக்காக வைக்கப்பட்டிருந்த சிவலிங்கத்தையே தூக்க ஆரம்பித்தது. ஒருநாளும் கோபிக்காத அந்த பிராமணர் அன்று ஏதோபசியின்கொடுமையால் புத்திமயங்கி அந்தக் குழந்தையை இழுத்து சீ! போ! என்று கடுந்து பூஜை ஸ்தலத்திற்கு கொஞ்சமப்பால் வைத்தார். அவ்வளவுதான்! குழந்தை மறைந்துவிட்டது. ஆகாசத்தில் நின்றுகொண்டு அவ்வந்தணனைப்பார்த்து பின்வருமாறு சொல்லிற்று:—

"குழந்தையிடம் அன்பில்லாத நீ சிவபூஜை பண்ணியென்ன பிரயோசனம்? நீ கெட்டாய். போ! நானினி உன்னிடம் வாசஞ்செய்யேன்,"

இதைக்கேட்டு அவர் நடுங்கி,

"ஐயோ! புத்தியீனத்தால் செய்துவிட்டேன். நான் எப்பொழுதும் என் குழந்தையிடம் வெகு அன்புள்ளவனுயிற்றே. அந்தக் குழந்தையைக் காணுமே" என்று கதற அதற்கு ஆகாயத்தில் நின்ற உருவம்.

"நான்தான் அந்தக்குழந்தை. 5-வயது வரையில் ஒவ்வொரு குழந்தையும் செய்வஸ்வரூபம். அதுவரையில் குழந்தைகள் செய்யும் பிழைகளை ஒருவன் பொறுத்துக் கொள்ள வேண்டும். அந்த வயதிற்கு மேற்பட்டுத்தான் கண்டிக்கவேண்டும். நீ என்னையின்று திரஸ்காரம் பண்ணினுய். இனிநான் உன்னிடம் தங்கேன்" என்றுசொல்லிற்று. அதற்கு அந்தணர்:—

"எனக்கு புத்திவந்தது. என்னைவிட்டுப் பிரிந்து போகக்கூடாது. என் குற்றத்தை ஒருவாறு மன்னிக்கவேண்டும்" என்று பரிதாபமாய்க் கேட்க, அதற்கு அவ்வுரு:

"இனி உன்பச்சாதாபத்தால் பிரயோஜனமில்லை. அச்சன் காட்டுக்கு வந்தால் என்னைக்கண்டு கொள்ளலாம்" என்று சொல்லி மறைந்து விட்டது.

இனி என்னசெய்வார் அந்த அந்தணர். அவருக்கு ஒன்றும் தோன்றவில்லை. பயித்தியம் பிடித்தவர் மாதிரி ஆய்விட்டார். அருமையாய் வளர்த்த செல்வக்குழந்தை போனதுடன் ஒரு குற்றம் ஒன்று அவர்மேல் ஏற்பட்டது. அச்சன்காடு எங்கே? அச்சன்காடு எங்கே? என்று பார்க்கிறவர்களை எல்லாம் கேட்டுக்கொண்டு அவர் சம்சாரசகிதம் வெளிக்கிளம்பிவிட்டார். வெகுநாள் வரையில் அலைந்து திரிந்தார். "போ! போ! உனக்குப்பயித்தியம்" என்று எல்லாருமிவருக்கு பதில் சொன்னர்களே யல்லாது ஒருவனுவது அச்சன்காடு இன்ன பக்கத்தில் என்று எடுத்துக்காட்டவேயில்லை. ஐயோ அச்சன் காட்டை யின்ன பக்கமிருக்கிறதென்று ஒருவராவது சொல்லவில்லையே என்று ஏங்கி கவலைப்பட்டு அலைந்து கொண்டு ஒருகாட்டின் மார்க்கமாய் போய்க்கொண்டிருக்கையில், அங்கு ஒரு வேலைக்காரி தன் குழந்தை அதிகமாய் அழுவதையும் அவள் அதை அழாதே அழாதே என்று சாந்தப்படுத்துவதையும் பார்த்தார். என்ன சொல்லியும் குழந்தை அழுவதைவிட்டு ஓயவில்லை. இவளுக்குக் கோபம் பொங்கிவிடவே அந்தக் குழந்தையைப்பார்த்து "இந்தா! பேசாமலிருக்கிறுயா, இல்லாவிட்டால் இந்த அரசன் காட்டில் வீசி யெறிந்து விடட்டுமா?" என்றுள். இதைக் கேட்டதும் அவ்வந்தணனுக்கு வந்த ஆனந்தத்திற்கு அளவேயில்லை. இத்தனைநாளாய் அவர் பல பெயரைக் கேட்டும் அறிந்துகொள்ள முடியாத இடத்தை ஒரு பெண்பிள்ளை அகஸ்மாத்தாய்ச் சொல்லிவிட்டாள். உடனே அவர் அவளிடம் வெகு ஆவலோடு ஓடி "அம்மணி அந்த அரசன்காடு எங்கே?" என்று கேட்டார். அதற்கு அவள் திகைத்து தானிருந்த இடத்திற்கு சமீபத்தில் என்று வழியைக் காட்டிவிட்டு தனது இருப்பிடம் சென்றுள்.

இவ்வந்தணரும் தனது மனையாள் சகிதம் அந்த அரணியத்தில் பிரவேசித்து 6,7 நாழிகைவழிதூரம் செல்லுகையில் அங்கு ஒரு மரக்கட்டையை கட்டிக்கொண்டு அழுது கொண்டிருக்கும் ஒரு குழந்தையைக்கண்டார். அவ்விடத்தில் தான் ஈசன் கவலையடைந்த தகப்பனுருக்கு இம்மாதிரி காட்சி கொடுத்தார். இதுதான், அனந்த சயனத்தின் காட்சி இன்றைக்கும். இவ்வளவுதூரம் இந்த இடத்தில் ஒவ்வொரு சிறு பழமொழிக்கு எழுதியது நாம் 4,5-வயது வரையில் குழந்தைகளிடம் அன்பாயிருந்து நல்ல விளையாட்டாலும் அபிமானத்தாலும் அவர்களை நல்ல வழியில் கொண்டுவரவேண்டும் என்பதை வற்புறுத்திக்காட்ட வேண்டியதன்பொருட்டே. (இதை விவேகசிந்தாமணியின் "பாலபோத சமஷ்டி சேவை" ஸாதன ஸஞ்சிகையில் ("Vivekachintamani Children's Record") வெகு அழகாக எடுத்துச்சொல்லியிருக்கக் காணலாம். வேண்

டுவோர் "விவேகசிந்தாமணி சந்தாதாரராகச் சேர விரும்பினால் சந்தா தொகைக்குள்ள வி.பி. சார்ஜோடு இதையும் இலவசமாகவே சேர்த்த னுப்புவோம்.)

(2) பேரில்லாச்சன்னதி பாழ் பிள்ளையில் லாச்செல்வம் பாழ்.

இதுவும் முற்கூறிய பழமொழிக்குச் சமானம். பிரபு என்று பெயர்மட்டும் படைத்து கீர்த்தியில்லாம லிருந்தால் ஒருவன் ஜன்மம் எப்படி வியர்த்தமோ அதுபோல், அளவற்ற ஐசுவரியம் படைத்து தனக்குப் பிற்காலம் அதையாள ஒரு குழந்தையில்லாவிடில் அந்தச் செல்வம் வீண் என்று சொன்னபடி.

(3) ஐந்தெழுத்தும் பாவனையும் அவனைப் போலிருக்கிறது.

இது ஒரு குழந்தை தன் தகப்பனுடைய ஒவ்வொருவித அங்க அடையாளத்திலும் ஒத்திருந்தால் அப்பொழுது உபயோகிக்கப்படும் பழமொழி. ஐந்து எழுதது என்பது இந்தப் பழமொழியில் ஐம்புலன்கள் என்று கருத்தாகும். (ஸ்தூல சூக்ஷ்ம பூதங்களுக்கும் அர்த்தமாகும்)

(4) ஆரும் ஆரும் உறவு தாயும் பிள்ளையும் உறவு.

இந்தம் பழமொழிக்கு தாய்க்கு தன் பிள்ளையிடமிருக்கும் ஜாஸ்தி அபிமானத்தை வெளிப்படுத்தும் மூதுரை.

(5) சுற்றவனும் உண்பான் பெற்றவனும் உண்பான்.

இது மக்களைப் பெறுதல் ஒரு ஆஸ்தியை யடைவதற்குச் சமானம் என்று காட்டுகிறது. எப்படி நமக்குக் கல்வி, ராஜாங்கம் முதலிய இடங்களில் வயிறு வளர்க்கும்படியான லாபம் முதலியவற்றைத் தருகின்றதோ அதுபோல பிள்ளைகளைப் பெற்றால் வீண்போகாது: நமக்குத் தள்ளாதகாலத்தில் அவர்கள் ஏதாவது நமக்கு சம்பாதித்து வந்து நம்மை ரட்சிப்பார்கள் என்றபடி.

(6) பள்ளி பிள்ளை யென்றால் செலவம் குறையுமா.

இதன் கருத்து உயர் குலத்தானாயினும் தாழ் குலத்தானாயினும் ஏழையாயினும் பணக்காரனாயினும் அவனவனுக்கு தன் பிள்ளை அருமைப்பிள்ளை தான் என்பதாம், பள்ளியின் பிள்ளையாயிருந்த போதிலும் அதற்கு தன் வீட்டில் செல்வம் ஏன் குறைவுபடும்? ஒரு பொழுதும் குறைவுபடமாட்டாது என்றபடி.

(7) காக்காய்க்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு.

முற்கூறிய பழமொழிக்குச் சமானம். காக்காய்க் குஞ்சு நிறத்தில் கறுப்பு என்று சொல்ல வேண்டியதில்லை. அப்படி யிருந்தபோதிலும் அதன் தாய் கண்ணுக்கு அது பொன்வருணமாகத்தான் தோன்றும். அதாவது என்னதான் அழகுக் குறைவாயிருந்தாலும் ஒவ்வொரு தாய் தகப்பனுக்கும் தன் குழந்தை அழகாய்த் தான் காணப்படும் என்பதாம்.

(8) அடுக்களைக்கு ஓர் பெண்ணும் அம்பலத்துக்கு ஓர் ஆணும்.

இதன் அருத்தத்தை பின்னொரு சஞ்சிகையில் விஸ்தாரமாய் எழுதுவோம். இதன் கருத்து இல்லவிருத்திக்கு ஒரு பெண் குழந்தையும் ஒருவன் பெயரையும் பொருளையும் அங்கீகரிக்க ஒரு படித்தபிள்ளையும் வேண்டும் என்பதாம். ஏனெனில்,

(9) தகப்பன் பட்டம் பிள்ளையதல்லவா.

சுலபம்; தகப்பன் பெயரையும் கீர்த்தியையுமனுபவிக்க அவன் குமாரன் என்றபடி. முக்கியமாய் எந்தப் பிள்ளைக்கு என்றால்,

(10) தகப்பன் பட்டம் பிள்ளைக்கல்லவா.

மூத்தபிள்ளைக்கு என்றபடி.

(11) தாயைப்போல் பிள்ளை நூலைப்போற் சீலை.

வெகு உண்மையான பழமொழி. புருஷன் வெளியிற்சென்று பணந்தேடுகிறவனாகையால் அவனுக்குத் தன் குழந்தையை அதிகமாய் அடிக்கடி பார்த்துக்கொள்ள அவகாசமிருக்

காது. வீட்டிலிருக்கும் பெண்பிள்ளைதான் இந்த விஷயத்தில் அதிக கருத்துள்ளவளாக இருக்கவேண்டும். இதற்காகத்தான் பெண் பிள்ளைகள் சிறுவயதில் கற்றறிந்திருந்தால் தாங்கள் குழந்தைகளை சீராய் வளர்த்து புத்தி மதிகள் உபதேசிக்கக்கூடிய யோக்யதையுள்ள வர்களாவார்கள். தாய் தொட்டிலாட்டும் பொழுதும், பால் புகட்டும்பொழுதும், அமுது அளிக்கும்பொழுதும், தன் சிறு குழந்தைக் குப் போதிக்கும் கதைகளும் மூதுரைகளும் அதன்மனதில் எவ்வண்ணம ஏறுமோ அம்மா திரி மற்றவர்கள் போதிக்கும் உபதேசங்கள் ஏறுவாம். இம்மாதிரி உபதேசங்களில் நற்று யின் பாக்யத்தால் வித்வான்களானவர்கள் வெகுபெயர்கள் என்பது அங்கிலேயம் இன் னும் மற்ற பெண்கல்வி சிர்பெற்ற இடங்களை பரிசோதித்தவர்களுக்கு புலப்படும். ஆகை யால் தாயைப்போல் பிள்ளை என்பது நூலைப் போற் சீலை என்பது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை என்றபடி.

(12) தாய் உறவோ நாய் உறவோ.

மிருகங்களுக்குள் நாயானது யஜமான விசு வாச மதிகமாயுள்ளதென்பது லோகப் பிரசித் தம். அதுபோல் தாயின் விசுவாசம் மக்களிடத் தில் என்பதும் லோகப்பிரசித்தம். இதை இவ் வளவு அழகாய் இந்தப் பழமொழி எடுத்துக் காட்டுகிறது.

(13) பிச்சையிட்டுக் கெட்டவனும் இல்லை, பிள்ளைபெற்றுக் கெட்டவனும் இல்லை.

அதிகக் குழந்தைகளைப்பெறுவது துவக்கத் தில் அவர்கள் ஸம்ரக்ஷணை முதலியவைகளில் கொஞ்சம் கஷ்டமாயிருந்தபோதிலும், பிற் காலத்தில் சுகமாகவே யிருக்குமாகையால் பிள்ளைபெற்றுக் கெட்டவனுமில்லை என்று சொல்லப்பட்டது.

(14) பிள்ளைபெற்றவனுக்கும் மாடுபடைத்த வனுக்கும் வெட்கமில்லை.

சுலபம். பிள்ளையும் துஷ்டனுயிருக்கலாம், மாடும் கொண்டியாயிருக்கலாம்; வெட்கப்பட்டு அவைகளை அகற்றமுடியாது. மாடு தானே ஏன் அகற்றமுடியாதென்றால் ஒருக்கால் அது சிலவேளை கொண்டியா யிருந்தபோதிலும் அதிக உழைப்பாளியாயிருக்கலாம். ஆகையா லிவைகளை நல்வழியில் கொண்டு வந்து சீர் திருத்தி பிரயோஜன முள்ளவைகளாகச் செய்துகொள்ளவேண்டும் என்றபடி.

---

## THE GENERAL CONFLAGRATION OF EUROPEAN WAR.

### DIVINE WILL WORKS FOR GOOD.

Lucknow, Aug. 10—Preaching in Christ Church yesterday (9th) Canon Oldham quoted the Premier's words saying that "this was a just war." He urged that this was essentially a time for action and that all Britons had a paramount duty. They should put away selfishness and self-seeking. "Be ever ready to lend a helping hand to those in trouble and perform your duties with redoubled zeal." They should assist by all the means in their power those in authority and whatever the issue, they might rest assured that it would be in accordance with the Divine Will working for the good of the world.—*Telegram.*

## காட்டுத்தீப்போல் பரவிய கன யுத்தம்.

தென்னல் முற்றிப் பெருங்காற்றாகி காட்டுத்தீ யோடு கலந்துகொண்ட அதிர்சயம்.

---

தென்னல் முற்றிப் பெருங்காற்றான கதை யாக ஒரு பள்ளிப்பையன் செய்த காரியம் பிர மாதமாகி ஐரோப்பா முழுவதும் ரணகளமா கும் ஸ்திதியில் வந்திருக்கிறது.

"சிறியோர் செய்த சிறு பிழையெல்லாம்
பெரியோராகிற் பொறுப்பது கடனே"

என்று சொன்னவர்தாமே

"சிறியோர் பெரும்பிழை செய்தனராயின்
பெரியோரப்பிழை பொறுத்தலுமரிதே"

யென்று சொல்லியிருக்கிறார்.

இப்பொழுது. ஐரோப்பா கண்டத்திலுள்ள தேசங்களெல்லாம சண்டைக்கு முனைந்து யுத்தவிருது கட்டிக்கொண்டு கிளம்பியிருக் கின்றன.

ஆஸ்திரியா, ஹங்கேரி, ஜர்மனி யொருபக்கம்; ஸெர்வியா, ருஷ்யா, பெல்ஜியம், ஹாலண்டு, ப்ரான்ஸ், இங்கிலாந்து ஒரு பக்கம்.

ஆஸ்திரியா-ஹங்கேரிக்கும் ஸெர்வியாவுக்கும் முதலில் சண்டையாயிற்று.

இதற்குக் காரணம் என்னவென்ருல் ஒரு பள்ளிப்பையன் செய்த பெருங்குற்றமாம். கேட்பார் பேச்சைக் கேட்பது "எடுப்பார் கைக்குழந்தையாம்" நிதானபுத்தியில்லாத சிறுவர்கள் ஸ்வபாவம். இவர்களைக் கொண்டு பெருங்கொலைக்குற்றம், கலகம் செய்விப்போர் அடாது செய்பவராவர்.

ஆஸ்திரியா தேசத்து இளவரசும் அவர் பத்தினியாரும் திடீரென்று வெடிகுண்டால் கொலையுண்டு மாண்டார்கள். இக்குற்றம் செய்தது ஸெர்வியஜாதிய பையன் ஒருவனும்.

ஆஸ்திரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் விரோதம் இயல்பாக உண்டுபோலும்.

இதைச் சாக்கிட்டு ஆஸ்திரியா தேசத்து கவர்ன்மெண்டார் ஸெர்வியா தேசத்துட் புகுந்து தம் அதிகாரத்தைச் செலுத்த நினைத்தனர். நினைத்ததுமன்றி அப்படியே தூதனுப்பினர். ஸெர்வியா தேசத்தார் அதற்கு உடன்படவில்லை. இரு தேசத்தாருக்கும் மனஸ்தாபம் நேரிட்டுவிட்டது. இந்த மனக்கொதிப்பிலிருந்துண்டான நெருப்பு காட்டுத்தீபோல் எங்கும் பற்றிக்கொண்டு ஐரோப்பா முழுவதையும் அமர்க்களமாக்கிவிட்டது.

ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தலி இம்மூன்று தேசத்தாருக்கும் ஒரு சிநேகக் கட்டுப்பாடுண்டு. அதன்படி ஒரு தேசத்தை யாராவது எதிர்த்தால் மற்ற தேசத்தார் அத்தேசத்துக்கு உதவிபுரிய உடன்பட்டுள்ளார். ஆஸ்திரியாவுக்கும் ஸெர்வியாவுக்கு முண்டான சண்டையில் ஆஸ்திரியா ஸெர்வியாவின் மீது படையெடுத்துச்சென்றதால் அது வலுவுச் சண்டையென்று சொல்லி இத்தலி தேசத்தார் ஒதுங்கியிருந்து விட்டார்கள்.

ஜர்மனி சக்ரவர்த்தி அப்படிக்கின்றி ஆஸ்திரியாவுக்குப் பரிந்துகொண்டு கிளம்பினர்.

ஸெர்வியர் தேசத்திலுள்ளவர்களும் ருஷியா தேசப் பிரஜைகளாயுள்ளாரும் உடன்ஜாதியானது கொண்டு அவர்களை வென்று அவர்கள் தேசத்தைக் கட்டிக் கொள்வது ருஷியாவுக்கு ஹிதமாயில்லை. ஆகையால் ஸெர்வியாவுக்குப் பரிந்துகொண்டு ருஷியா சண்டைக்கு ஆயத்தமாக, ஜெர்மனி சக்ரவர்த்தி அது பொறுக்காமல் ருஷியாபேரில் யுத்தம் செய்யத் தொடங்கிவிட்டார்.

ருஷியாவுக்கும் ப்ரான்ஸுக்கும் இங்கிலாந்துக்கும் ஒருவித ஸ்நேக ஸம்பந்த மனோ ஐக்கியமுண்டு. இதற்கு "Entente" என்று சொல்லுகிருர்கள்.

ஜெர்மனிக்கும் ருஷியாவுக்கும் சண்டையுண்டாகவே (இது ஆகஸ்டுமீ 2௳ நேர்ந்தது) ஜெர்மனி ப்ரான்ஸ் தேசத்தைத் தாக்க நினைத்து ஜெர்மனிக்கும் ப்ரான்ஸுக்கும் இடையிலுள்ள பெல்ஜியம் நாட்டு வழியாக சைனியங்களை நடத்திப்போக சாதகம் செய்ய வேண்டுமென்று கேட்டார்கள்.

பெல்ஜியமும் அதற்கடுத்த ஹாலண்டும் சண்டையில் ஒரு கக்ஷியையும் சேருவதில்லையென்று ஒதுங்கியிருந்தார்கள்.

ஜெர்மனிக்கு பெல்ஜியத்தின் வழியாய்ப் போய்த்தான் ஆகவேண்டியதாயிருந்தது.

ஆதலால் பெல்ஜியம் அனுமதி கொடுக்காவிட்டால் பலாத்காரமாகப் பிரவேசிப்போமென்று தூதனுப்பி அப்படியே பிரவேசமும் செய்தார்கள்.

இது இங்கிலாந்துக்குப் பொறுக்கவில்லை, பெல்ஜியத்தின் எல்லைக்குள் ஒரு ஜெர்மன் யுத்தவீரன் காலடிவைத்தாலும் போதும், நாங்கள் சண்டைக்கு வருவோமென்று தூதனுப்பினர்கள்.

ஜெர்மனி சக்ரவர்த்தி அவர்கள் தூதனுப்பியதை மதிக்காமல் பெரியயுத்தம் நடக்கிறபடி நடக்கட்டுமென்று பெல்ஜியத்துக்குள் பிரவேசித்துவிட்டு, "இங்கிலாந்து தேசத்தார் பெல்ஜியத்தை ஜெர்மனியோடு சேர்த்துக்

கொள்ளப் போகிறதாக பயப்படுகிறார்கள்: அப்படிப்பட்ட எண்ணம்சிறிதுமில்லை யென்று அவர்களுக்கு உறுதிகூறவும்'' என்று தூதனுப்பினர்.

ஆங்கிலேய அரசரும் ஜெர்மனி சக்ரவர்த்தியும் விக்டோரியா மஹாராணியின் பேரப்பிள்ளைகள். ஜெர்மனி சக்ரவர்த்தி பெண்வயிற்றுப் பேரன். ஆங்கிலேய அரசர் பிள்ளைவயிற்றுப்பேரன். ஆகவே உறவுமுறையில் அத்தான்-அம்மாஞ்சி யாகவேண்டும்.

ஜெர்மனி சக்ரவர்த்தி வாக்சாலகர்.

ஆங்கிலேய அரசர் அடக்கமும் பொறுமையும் தீரமுமுடையவர். அத்தான் அம்மாஞ்சியை ஏமாற்றி விடலாமென்று பார்த்தார் போலும் தோன்றியது. ஆனால் அவர் ஜாலம் பலிக்கவில்லை.

ஆகஸ்டுமீ 4உ செவ்வாய்க் கிழமை இராத்திரி பதினொன்றே முக்கால் மணிக்கு ஆங்கிலேயதேசத்தரசர் தமக்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் உண்டாய்விட்டதென்று தெரியப்படுத்திவிட்டார்கள். பின்னும் ½ மணி நேரத்துக்கெல்லாம் ஜெர்மனி சக்ரவர்த்தியும் அப்படியே யென்று தெரிவித்து விட்டார்.

இப்பொழுது அங்கங்கே கைகலந்து சண்டைகள் சின்னதும் பெரியதுமாய் நடந்துவருகின்றன. ஸெர்வியாதேசத்தார் ஆஸ்திரியா தேசத்தாரை உள்பிரவேசிக்க விடாமல் அடித்துத் துறத்திவிட்டார்கள்.

ஜெர்மனி தேசத்தார் பெல்ஜியம் தேசத்தில் பிரவேசித்து அடிபட்டுக்கொண்டு திரும்பி ஹாலண்டு மார்க்கமாப் ப்ரான்ஸ் எல்லைக்குப் போகப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஹாலண்டு தேசத்தார் அவர்களை யெதிர்த்து வருகிறார்கள்.

உலகெங்கும் காப்ரா அதிகப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட பெரிய யுத்தம் நெபோலியன் காலத்துக்குப்பின் ஐரோப்பாவில் எப்பவும் நேர்ந்ததில்லை.

நிலத்திலும், நீரிலும், ஆகாசத்திலும் சண்டைகள் நடக்கின்றன. நகரங்கள் பட்டணங்களைப் பகைவர்கள் இடித்துத் தகர்த்துப் பாழாக்கி வருகிறார்கள்.

“குயவனுக்குப் பலநாளைவேலை: தடிகாரனுக்கு ஒருநாளைவேலை'' யென்கிற பழமொழியாக வருஷக்கணக்காகப் போற்றிவந்த சமாதானம் ஒருவாரத்தில் (ஜூலைமீ 28உ முதல் ஆகஸ்டுமீ 4உக்குள்) இருந்தவிடம் தெரியாமல்போய் தென்னல் முற்றிப் பெருங்காற்றாகிக் காட்டுத்தீயோடு கலந்துகொண்ட கதையாக, சில்லரை மனஸ்தாபங்கள் பெரிய வர்மங்களாக முற்றி முதிர்ந்து “பாரதப்போர்'' ஒத்த மஹா பெரிய சண்டையில் வந்து முடிந்துவிட்டது.

“அதர்மம் முற்றி முதிர்ந்தால் தர்மம் தலையெடுக்கச்செய்ய நான் எப்போதும் அவதாரமாகிறேன்'' என்பதை நீ அறிவாயாக வென்று போர்க்களத்தில் விசுவரூப தரிசனமளித்துத் தேற்றிய அருச்சுனனுக்கு வாக்குறுதி கூறிய பகவான் பூமிபாரம் தீர்க்க நினைத்தார் போலும் இம்மஹா பெரியயுத்தம் வந்துமூண்டுகொண்டிருக்கிறது.

யூனைடெட் ஸ்டேட்ஸ் ப்ரெஸிடெண்டவர்கள் சண்டைக்காரர்கள் சம்மதித்தால் தாம் மத்தியஸ்தம் செய்ய வருவதாகக் கூறியிருக்கிறார். ஆனால் அதை யாரும் கவனித்ததாகத் தோற்றவில்லை.

“தர்மமே ஜெய''மென்ற பிக்ஷைகேட்டேன் ;
தரணியிலே கலிமுற்றுங் காலமாச்சு!
பரணியிலே யதிஷ்டானங் கூடலாச்சு!
அரணியிலே அக்கினியும் தோன்றலாச்சு!
ஆன்மாக்களீடேற மார்க்கங்கேண்மின்!''

என்றுசொல்லி “ஆசையறுமின்கள், ஆசையறுமின்கள்'' என்று ஆத்ம தத்துவத்தைப் போதித்த பெரியோர்கள் வாக்கு மெய்க்கலாயிற்று.

“மாசுபடிந்த மனத்தினுரவறமின்கள்
தூசுபடிந்த தபசிலன் தயவை யரவினுறவெனவே
கண்டஞ்சியோடிப் பிழைமின், பிழைமின் குழைமீரே!
உண்டுடுத் துறங்கு வஞ்சகநெஞ்சின ருள்ளம்போல்
கண்டங்கறுத்துள்ளம் நடமாடி காட்டிய வழியிதுவே''

யென்றோதிய பிக்ஷாடனமூர்த்தி யுபதேசவாக்கும் உண்மையாயிற்று. ஊரைவிட்டு, நாட்டைவிட்டு ஓடிப்பிழைக்க வழியில்லை. தேஹத்தைவிட் டோடினாலும் தேஹோஹபாவம் மாறுதவரையில் மறுஜன்மம் சித்திப்பது நிச்சயம். ஆதலால் அறிவே குருவென்றுறுதியாய் நம்பி அஹத்தூய்மையால் சிற்றம்பல தரிசனஞ் செய்து அங்கே குஹப்ரஹ்மமாய் விளங்கும் பாலதேவனும் குமாரக்கடவுளைத் தஞ்சமென்றடைந்து "அஞ்சேல்!" என்று அவர் அபயமளிக்க பயந்தீர்ந்து, செய்கடன் திருந்தச்செய்து நைஷ்கர்மசித்தி பெற்றுய்வதே வழியன்றி வேறு பிழைக்கும்வழி யில்லை. "கடவுளை நம்பினர் கைவிடப்படார்."

---

## READINGS FROM THE BOOK OF NATURE

"MOUNT VESUVIUS"

### பிரகிருதி வித்தியாம்சம்.

#### விசூவியஸ் எரிமலை.

விசூவியஸ் எரிமலையானது உலகத்திலுள்ள எரிமலைகளெல்லாவற்றினும் மிகவும் பெயர் பெற்றதென்றும் அதைக் குறித்த விசேஷங்களை பிரத்தியேகமாய் எழுதுவதாகவும் முந்தின சஞ்சிகையில் சொன்னோமல்லவா.

விசூவியஸ் எரிமலையின் பூர்வ காலஸ்திதி.

இப்பெயர் பெற்ற மலையானது '1 ஐரோப்பா' கண்டத்துத் தீபகல்பங்களி லொன்றாகிய '2 இத்தாலியா தேசத்தின் ஓர் மாகாணமாகிய '3 காம்பேனியா' வில் '4 நேபில்ஸ்குடா' வின் கீழ் கரையில் ஆகாயத்தை அளாவி நிற்கின்றது. இதைச் சற்றேறக்குறைய இருபது நூற்றாண்டளவாய் நாகரீகம் பெற்றுக் கீர்த்தியடைந்த ஜாதியாரால் குடியேறப் பட்டுள்ளது. ஆனதுபற்றியே இம்மலையானது எரிமலைகளென்பவை எவ்விதத்தனவயென்றுசாமானியமாய் ஜனங்கள் அறிந்து கொள்ள ஓர் உதாரணமாக உதவுகின்றது. அதன் கொதிப்புகளைக் குறித்த சரித்திரமோ, பூமியின் உட்புறத்தி லுள்ள விசேஷ உஷ்ணத்தைக் குறித்தும், அவ்வுஷ்ணமானது எரிமலைகள் வெந்நீரூற்றுகள் 'உஷ்ண ஆவிகக்கும் பிளவுகள்' முதலான இவைகள் மூலியமாய் சுற்றிலும் உள்ள நாடேடே வெளியேவரும் வஸ்துக்கள் முதலியவற்றைக் குறித்தும், பூமி லக்ஷண சாஸ்திரக் கற்பனைகளின் பிரகாரம் நிரூபிக்கவேண்டுமான சங்கதிகளைக் காட்டியிருக்கின்றது. இம்மலையின் உயரம் அப்போதைக் கப்போது இதில் உண்டாகும் கொதிப்பின் பிரகாரம் மாறுபாடடைந்து வருகிறது. சில சமயங்களில் உண்டாகும் வெடிப்பில் மலையின் மேற்புறம் தகர்க்கப்பட்டுச் சின்னாபின்ன மாக்கப்படுவதால் உயரம் குறைவது முண்டு. சிற்சில சமயங்களில் வெடிப்பின் காரணமாய் வெளியே கக்கப்படும் கற்குழம்பு, பாறைத்துண்டு முதலியவற்றால் உயரம் அதிகமாவது முண்டு. ஆயினும், இம்மலையானது சமுத்திரமட்டத்திற்கு ஏறக்குறைய 4,000-அடிக்கு மேல் இருப்பதாகச் சொல்லலாம். வடபக்கத்தில் ஏறக்குறைய 3,747 அடி உயரமுள்ளதும் அர்த்த மண்டலமாய் வளைந்ததுமான ஓர் குன்று தற்காலத்தில் கொதிப்படுக்கும் பாகமாகிய குவிந்த வடிவுள்ள குன்றை அர்த்தாகாரமாய் வளைத்துக்கொண்டு சரிந்த வண்ணமாய் கீழ் நோக்கிச் செல்கின்றது. 'மாண்டி சோம்மா' என்று சொல்லப்படும் இந்த செங்குத்துப் பாகமானது பூர்வீகத்தில் இம்மலையில் இருந்த ஒரு பெரிய உலைவாயின் சுற்றுப்பக்கத்துச் சுவராயிருக்கு மென்று தோன்றுகிறது. ஆனால் இப்பழமையான வாய் தற்காலத்திய உலைவாயிலிருந்து கக்கப்படும் கற்கள் முதலியவற்றால் தூர்ந்துபோய் வருகிறது. முற்காலத்தில் இந்த எரிமலை யானது மிகவும் பெரியதாயிருந்ததாகவும், அப்போது நேர்ந்திருக்கக்கூடிய ஒரு பெரிய கொதிப்பினால் மேல் பாகம் உடைக்கப்பட்டு சின்ன பின்னமாய் உருமாறி இப்போது இருக்கும் சிறிய

உருவத்தை அடைந்திருக்கக் கூடுமென்றும் ஊகிக்கிறார்கள். இம்மாதிரி பின்னமாயிருந்த இந்த மொட்டை மலையின் சுற்றுப் புறத்தில் தான் 'பூர்வீக கிரேக்கர்கள்' நவீனமாய் வாசஸ்தானங்கள் ஏற்படுத்திக்கொண்டு குடி ஏறினார்கள். கிறிஸ்து பிறந்த ஆரம்பத்திலும், அதற்கு முன்னால் அனேக நூற்றாண்டுகளிலும் இம்மலையானது வெடித்துக் கொதிப்புக் கொண்டதாகத் தெரியவில்லை. சரித்திரத்தில் ஏற்பட்ட இதன் முதற் கொதிப்பு கிறிஸ்து பிறந்த 79-ம் வருஷத்தில் உண்டாயது. இக்கொதிப்பு உண்டாய பின் இந்த



விஸுவியஸ் எரிமலை.

மலை வடிவில் பழய மலையின் சற்றே தாழ்ந்த பாகத்தின் பேரில் குவிந்த வடிவமுள்ளதாய் ஒரு குன்று தோன்றியது. இது மேற்கண்ட கொதிப்பினால் மலையிலிருந்து வெளியே வீசி எறியப்பட்ட கற்குழம்பு, பாறை முதலியவற்றால் உண்டான புதிய குன்று. இச்சிறிய குன்றை ஒழித்து நோக்கில் கிரேக்கர் இந்த மலையைச் சுற்றிலும் குடியேறிய காலத்து அதற்கு இருந்த உருவை ஊகிக்கலாம். விசேஷ பூஸாரமுள்ள இம்மலைச் சரிவுகளில் திராட்சத் தோட்டங்களை ஏராளமாய் விர்த்திசெய்தும், மலையின் அடிவாரத்தைச் சுற்றிலும் அனேக கிராமங்களையும் பட்டணங்களையும் ஏற்படுத்தி விர்த்திசெய்தும் வந்த கிரேக்கர் விசுவியஸ் மலையினிடத்து இருந்த எரியுந்தன்மையைச் சற்றேனும் அறிந்திலர் போலும். அற்றேல் அவர்கள் அவ்வெரியமலையின் வாய்க்கு இரையாக்க நாடு நகரங்கள் முதலியவற்றை அவ்விடத்தில் ஏற்படுத்தியிருக்க மாட்டார்கள் என்பதற்கு ஐயமில்லை. புற்றில் கொடுநாக மிருக்கிற தென்று அறிந்தும் அதனுட் கைவிடுவாருண்டோ! அக்காலத்தில் அதிக புத்திகூர்மையும் அவதானமுமுள்ள பூகோளசாஸ்திரி யாகிய 'ஸ்டிராபோ' (Strabo) என்பவர், மலையின் குவிந்த வடிவம் எரியும் தன்மையால் உண்டாயிருக்கக்கூடியதென்றும், அதன் பாறைகள் அக்கினி சம்பந்தத்தால் மழுங்கி யிருக்கக்கூடியவை என்றும் சந்தேகித்து எழுதி யிருக்கிறார். இவர் சொல்லி யிருப்பதைக்கொண்டும், இன்னும் மற்றும் அக்காலத்திலிருந்த உரோம, கிரேக்க கிரந்த கர்த்தாக்கள் சொல்லி யிருப்பதைக் கொண்டும், விசுவியஸ் மலைச்சார்பானது கிறிஸ்து பிறக்க வெகுகால முன் முதற்கொண்டு

அதிக செழிப்பாய்ப் பயிரேற்றப்பட்ட வளமுள்ள பூமியாயிருந்ததென்று தெரியவருகிறது. ஆனால் இம்மலையின் சிகரமோ பயிர் பச்சை ஒன்று மில்லாமல் பாழாய் நாற்புறமும் கரடுமுரடான பாறைச்சுவரால் சூழ்ந்து விடுதியான சாம்பல் நிறைந்துள்ள பள்ள நிலமாயிருந்தது.

கி. பி. 79-ம் வருஷத்தில் நேரிட்ட பெருங் கோதிப்பு.

இந்த எரிமலையானது வெகு காலமுதற் கொண்டு கிறிஸ்து பிறந்து 63-வருஷங்கள் வரையில் யாதொரு சேஷ்டையு மில்லாமலிருந்து திடீரென்று ஆர்ப்பாட்டஞ் செய்யத் தலைப்பட்டது. 63-ம் வருஷத்திற்கு அப்பால் சற்றேறக்குறைய 16-வருஷங்கள் வரையில் பூகம்பங்கள் விசேஷமாய் உண்டாய்ச் சுற்றுப் பக்கத்துக் கிராமங்களுக்கும், பட்டணங்களுக்கும் அதிக நஷ்டத்தையும் கேட்டையும் உண்டாக்கியது. இம்மலை யிருக்கும் 'காம்பேனியா மாகாணமுழுமையும் ஜனங்கள் அதிக பீதியடைந்திருந்தார்கள். இவ்வதிர்ச்சிகளால் மலையடி வாரத்துக்கு மேற்புறத்திலிருந்த 'எர்குலானியம்' என்னும் பட்டணமும், தென் கிழக்கிலிருந்த 'பாம்பியை' என்னும் நகரமும் வெகுவாய் நாசமாக்கப் பட்டன. 'பாம்பியை' பட்டணத்திலிருந்த ஒரு பெரிய கோவிலானது அஸ்திவார முதற் கொண்டு ஒரே குலுக்காய்க் குலுக்கப்பட்டுப் பொடிப்பொடியாய் இடிந்து விழுந்தது. 'மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை' என்னும் வாசகத்தின் உண்மையை நாம் அனுபவசித்தியா யுணர்ந்து, அதிக மின்னல் இடி முழக்கம் இவைகளெல்லாம் உண்டான பிற்பாடு மழை தாரை தாரையாய் பொழியப் பார்த்திருக்கிறோமல்லவா. இது மாதிரியாகவே எரிமலை கொதிப்பெடுக்கத் துவங்கு முன் அதன் வரவை நமக்கு முன்னரே அறிவிப்பதாய் பூமியின் அதிர்ச்சியும், உட்புறத்தில் இடிமுழக்கம் போன்ற சத்தமும் உண்டாவது வழக்கமென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். 16-வருஷங்களாய் இவ்விதமாய் பூகம்பங்கள் கொடுமையிலும், கெடுதியிலும் காலம் செல்லச்செல்ல அதிகரித்துப் பிற்பாடு 79-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 24-ம் தேதி மலைமுடியில் ஓர் பெருவெடிப்பெடுத்துக் கொதிப்புண்டு அகோரமான தீமைகளை விளைவித்தது. இதனால் நேரிட்ட நஷ்டமோ உலக சரித்திரத்தில் இது காறும் மானிடருக்கு நேர்ந்ததாகக் குறித்திருக்கும் பெருங் கேடுகளில் இதுவும் ஓர் பெரிய அவகேடாய் நிற்கிறது. இதனால் விளைந்த தீமைகளை இச்சரித்திரத்தை அறிந்தோர்கள் நினைக்க இன்னமும் நடுங்குவார்கள். இக்கேட்டினால் சுற்றுப்பக்கத்தில் குடியேறியிருந்த ஜனங்களுக்கு நேர்ந்த துன்பத்தைக் குறித்தும், இதன் காரண காரியங்களைக் குறித்தும் பரீக்ஷித்து அறிய முயன்ற 'ப்ளினி' என்ற அக்காலத்திய பண்டிதர் ஒருவர் இந்தக் கொதிப்பினால் உண்டாகிய புகையால் முச்சுத்திணரி மாண்டதைப் பற்றியுமுள்ள விவரங்கள் அவர் சகோதரியின் புதல்வராகிய மற்றொரு 'ப்ளினி' என்பவரால் 'டாஸிடஸ்' என்னும் ஓர் சரித்திராசிரியருக்கு எழுதப் பட்டிருந்த இரண்டு கடிதங்களால் நன்கு விளங்குகின்றன. அக்கடிதங்களின் கருத்தை யாவருமறியச் சுருக்கமாய் இவ்விடத்தில் எடுத்துரைக்கிறோம்.

ப்ளினி என்பவரெழுதிய கடிதங்களின் சுருக்கம்.

மேற்குறித்த காலத்தில் பெரிய ப்ளினியும் அவர் மருமகனாகிய சிறிய ப்ளினியும் விசுவியஸ் மலையடிவாரத்துக் கருகாமையில் கடற்கரை யோரமாக விருக்கும் 'மைஸீனம்' என்னும் கிராமத்தில் குடி இருந்தார்கள். இப்படி அவர்கள் அவ்விடம் வசித்துக்கொண்டிருக்கையில் மேற்சொல்லிய 79-வது வருஷம் ஆகஸ்டு மாதம் 24-ம் தேதி பெரிய ப்ளினியானவர் ஸ்நானபானதிகளை முடித்துக் கொண்டு தமது அறையில் உட்கார்ந்து ஏதோ

ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்து யோசித்தவராயிருந்தார். அத்தருணத்தில் அவர் பெண்சாதி சரேலென்று உள்ளேவந்து, தான் என்றும் பார்த்திராததும் வெகு ஆச்சரியமான தோற்ற முடையதுமான ஒரு பெரிய மேகத்தைக் கண்டதாகவும், அதை அவரும் வந்து பார்க்கவேண்டு மென்றும் வேண்டினாள். அது கேட்டு அவர் வெளியே வந்து இவ்வதிசயக் காட்சியை நன்றாய்க் கண்டறியும் பொருட்டு ஒரு பெரிய மேடையின் மேல் ஏறிப்பார்த்தார். வெகு தூரத்திலிருந்து இந்த மேகமானது தென்பட்டபடியால் எவ்விடத்திலிருந்து இது உண்டாயதென்பதை உடனே நிதானிக்க முடியவில்லை; ஆயினும் பிற்பாடு இது விசூவியஸ் மலையிலிருந்து எழும்பியதாகத் தெரியவந்தது. இம்மேகம் ஒரு பெரிய தேவதாரு மரம்போலக் காணப்பட்டது; அடியில் பருமனுப்த் தடித்த அடி மரம்போலவும், மேலே வெகு செழிப்பாய்க் கிளைத்துத் தழைத்துக் கொப்பும் கிளையுமாய் காயுடனும், பூவுடனும் கவிழ்ந்து கொண்டிருக்கும் மரத்தின் மேற்பாகம் போலவும் தோன்றிற்று. சில சமயங்களில் இது பெரிய பீரங்கிகள் முதலிய வெடிக்கும்போது உண்டாகும் வெளிச்சம்போல் அதிக காந்தியுடையதாயிருந்தது. இருட்டாயிருந்த மற்ற சமயங்களிலோ இப்புகைக் குழப்பத்தினடுவில் பிரகாசமுள்ள சிறிய எரியும் வஸ்துக்கள் பளிச்சுப் பளிச்சு என்று மின்னிக்கொண்டிருந்தன.

இவர் இந்த ஆச்சரியத்தைக் கண்ணுற்றதும் அது உண்டாகும் இடத்திற்கு அருகாமையில் சென்று அதின் விசேஷத்தை அறியும் ஆவலுற்றவராய் அவ்விடம் பிரயாணமாய்ப்போக படகு ஒன்றை ஆயத்தம் செய்யச்சொன்னார். இதற்குள் விசூவியஸ் மலையடிவாரத்தில் ஓர் கிராமத்தில் வசித்துக் கொண்டிருந்த 'ரெக்டைனா' வென்னும் ஒரு ஸ்திரீ தான் இருக்கும் ஆபத்து நிலைமையையறிந்து கப்பலேறி வேறெவ்விடமாவது போய் உயிர் தப்புவதை ஒழித்து, தப்பிப் பிழைக்க வேறு வகையில்லை யென்று கண்டு ப்ளினி என்பவருக்கு இச்சமாசாரத்தைக் காட்டி எழுதியிருந்த கடிதம் அவருக்கு அப்போது கிடைத்தது. இதைக் கண்டதும், இம்மாதிரியாக மலையைச் சுற்றுப்புறத்திலுள்ள கிராமங்களில் அவதிப்படு மனேகரைக் காப்பாற்ற எண்ணங்கொண்டவராய், அனேகம் படகுகள் சித்தம் செய்துகொண்டு மலையை நோக்கிக் கடல்மார்க்கமாய்ச் சென்றார். அவ்விடத்துச் சனங்களெல்லாம் இப்பெருங் கேட்டுக்குப்பயந்து அங்குமிங்குமாக ஓடிக்கொண்டிருந்தார்கள். இருந்தாலும் இவர் மட்டும் அந்த ஆபத்தான இடத்தை நோக்கிச் சென்றவராயிருந்தார். போகப்போக இவர் ஏறியிருந்த படகில், எரிந்துகொண்டிருந்த நெருப்புத் துண்டுகளும், சூடுண்ட கல்துண்டுகளும் வந்து விழத்தலைப்பட்டன. இச்சமயத்தில் மலையிலிருந்து வீசப்பட்டு வந்து விழுந்த கற்களோ மணற்காடாயிருந்த சமுத்திரக் கரையை எல்லாம் நிரப்பிவிட்டது. இவ்விதமாய்ப் பல கேடுகள் உண்டாவதாய்த் தெரிந்தபடியால் படவோட்டும் மாலுமி திரும்பிப் போய்விடுவோமென்று எவ்வளவு சொல்லியும், 'ப்ளினி'யானவர் கேளாமல் தன் சிநேகிதராகிய 'பாம்போனியேனஸ்' என்பவர் இருக்கிற இடத்திற்கு படகைச் செலுத்தச் செய்து அவ்விடம் வந்து சேர்ந்தார். 'பாம்போனியேனஸ்' இருந்த இடம் அத்தருணத்தில் அவ்வளவு தீவிரமான அபாயஸ்திதியில் இல்லாமற்போனாலும், அவர் தன் சாமான்களையெல்லாம் படகிலேற்றி அவ்விடம் விட்டுப் புறப்படுவதற்குச் சித்தமாயிருந்தார். ஆனால் காற்றுவாய்க்கவில்லை யாதலால் அவர் பிரயாணம் தடைப்பட்டிருந்தது; அதற்குள் அவர் சிநேகிதர் ப்ளினியும் வந்து சேர்ந்தார். வந்ததும் பயந்திருந்த 'பாம்போனியேனஸ்ஸைத்' தேற்றுவித்து தான் ஸ்நானம்செய்து உணவுகொள்ள உட்கார்ந்தார். இங்கு இது இப்படியிருக்க, அங்கோர் மலையானது

அநேக விடங்களில் அகோரமாய் வெடிப்புக் கொண்டு வெகு கடோமாய்ப் பொங்கி எரியத் தலைப்பட்டது. இதற்குள் இராத்திரியாய் இருள் மூடியபடியால் இம்மலையின் எரியும் வஸ்துக்கள் அதிக பிரகாசத்துடன் தோன்றியதோடுகூட, பார்ப்பவர்கள் அஞ்சி நடுங்கும் படியாய் அவ்வளவு கோரமாயும் பயத்தைவிளைவிக்கத் தக்கதாயும் காணப்பட்டது. இந்த விபரீதக்காட்சியை 'பாம்போனியேனஸ்ஸும் அவர் உடனிருந்த மற்றவர்களும் கண்டு நடு நடுங்கித் தியக்கமுற்றுர்கள். ஆனல் ப்ளினியோ மனந்தளர்ந்த வரல்ல.

'மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணுயி னார்.'

அவருக்கு எரிமலையின் செய்கையை மேன்மேலும் பார்த்து அறிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவல் அதிகரித்துக் கொண்டே வந்தது. தனது நண்பர் முதலானவர்களுக்கு உண்டாயிருக்கும் பயத்தைப் போக்குவதின் பொருட்டு, இந்தப் பேரொளி, எரிமலையிலிருந்து விழும் வஸ்துக்கள் சுற்றுப்பக்கத்து கிராமங்களில் விழுந்து அவ்விடமுள்ள வீடுகளெல்லாம் தீப்பற்றி எரிவதனல் உண்டாகும் ஒளி என்றும், சத்தமோ வீடுகள் முதலியவை இடிந்து விழுவதால் உண்டாகும் சத்தமென்றும் சொல்லித்தேற்றினர். இவ்வாறு சொல்லி, தான் அதை யொன்றும் பாராட்டாமல் சயன அறையிற்சென்று நன்ருய் அயர்ந்து நித்திரை செய்தார். இதற்குள்ளாக இவர் இருந்த அறைக்கு முன்புறமிருந்த முற்றமுழுவதும் மலையாற் கக்கப்பட்ட எரியும் வஸ்துக்களால் நிரப்பப்பட்டது. இன்னும் சற்றுநேரம் அவர் அவ்விடத்திலேயே இருந்திருப்பாரானல் உருத்தெரியாமல் உருகி நீருயிருந்திருக்க வேண்டும். இவர் மலையின் எரிச்சலுக்குக் கொஞ்சமேனும் பயந்தவராயிராமல் அயர்ந்து நித்திரை செய்வதை மற்றவர்கள் கண்டு ஆச்சரியமடைந்து க்ஷணப்பொழுதில் அவருக்கு இருந்த அபாயத்தை அவருக்குத் தெரிவித்து அவரை நித்திரையிலிருந்தும் எழுப்பினர்கள். எழுந்ததும் அவர் தன் நண்பனுகிய 'பாம்போனியேனஸ்ஸும்' மற்றவர்களும் இருக்குமிடத்திற்குப் போனர். அவர்கள் பயந்தவர்களாதலால் மனந்தளர்ந்து கொஞ்சமேனும் உறக்க மற்றவர்களாய் விழித்திருந்தார்கள்.

இத்தருணத்தில் பூமி ஊசலாடத் தலைப்பட்டது. இத்துடன் வீட்டுச்சுவர்கள் முதலியன ஒன்றுக்கொன்று உறைந்துகொண்டு ஆடின. அப்போது அவர்களுக்கு வீட்டிற்குள்ளேயே இருப்பது க்ஷேமமோ அல்லது வீடு முதலியன இல்லாத வெட்டவெளியில்போய் நிற்பது அனுகூலமோ வென்று தெளிவாய்ப் புலப்படவில்லை. வீடு எங்கே நொருக்குண்டு விழுந்து ஒரே அமுக்காய் எல்லோரையும் அமுக்கி விடுமோ என்ற பயம் அவர்களுக்குள் வெகுவாய் இருந்தது. ஆனலும் வெட்ட வெளியில்போய் நிற்கவும் தைரியம் கொண்டார்களில்லை. மலையிலிருந்து வந்துவிழும் அக்கினி வருஷத்திற்கு பயந்தே அப்படி செய்ய அவர்கள் துணியவில்லை. ஆயினும் வீட்டிலிருப்பதைக் காட்டிலும் வெளியேபோய் விடுவதே அனுகூலமென்று பிறகு அவர்களுக்குத் தோன்றவே எல்லோரும் அவ்விடத்தைவிட்டு அகன்று சமீபத்தில் உள்ள ஒரு வெளியில் போய் நின்ருர்கள். ப்ளினியைத் தவிர மற்ற எல்லோரும் பயத்தாலே வெளியே ஓடிவந்தவர்கள். ஆனல் ப்ளினியோ வெளியேவந்தால் எரிமலையின் காரியங்களையும், அதிலிருந்து மழைபோன்று தாரை தாரையாய்க் கக்கப்படும் அக்கினித் துண்டுகள் முதலியவற்றின் குணங்களையும், பரிசோதித்து அறிந்து கொள்வதற்குச் சாதகமாயிருக்கு மென்றே எண்ணி வெளியேவந்தார். இவர்கள் வெளியே போகும்போது தலையில் கற்றுண்டு முதலியவை விழுந்து தகர்க்காமல் தலையணை, திண்டு, மெத்தை முதலானவைகளைத் தலையில்வைத்துக் கட்டிக்கொண்டுபோனர்கள். இவைகளைத் தவிர அவர்கள் தலைகளைக்காக்க வேறு

மறைப்பில்லை. பஞ்சுக்கும் நெருப்பிற்கும் இருக்கும் உறவை யோசிக்கில் இந்த ஆதாரமும் என்ன ஆதாரமாகும்! இவர்கள் செய்த சாகஸச்செயல் ஒருவன் மண் குதிரையை நம்பி ஆற்றைக்கடக்க எத்தனித்ததை யொக்கும்.

அப்போது பொழுதுவிடிந்து அருணோதயமாய் மற்றவிடங்களெல்லாம் பிரகாசமாயிருந்தது. இவ்விடத்திலோ அதிக இருள் மூடியிருந்தது. கதிரவனும் இக்கரோமான அக்கினி வெள்ளத்தையும், அதினால் மதிமயங்கித் தவிக்கும் ஜனங்களையும் பார்க்கச் சகியாது மறைந்திருந்தனன் போலத்தோற்றியது. இவ்வாறு தப்பிப்பிழைக்க வகையில்லாமல் இவர்கள் அவதிப்படுகையில், கடலோரம் சென்று படகேறிப் பாய்விரித்து நடுக்கடலில்போய் நிற்கலாமோ என்ற ஓர் எண்ணம் அவர்களுக்குள் உண்டாகியது. அப்படியே கடற்புறம் சென்றார்கள். கடலோ கொந்தளித்து பெரு அலைகளாய் அதிக உயரம் கிளம்பிக் கரையைத்தாக்கி மோதிக் கொண்டிருந்தபடியால் கிட்ட அணுக ஏலாததாயிருந்தது. அவர்கள் தாங்கள் பட்ட அவதியினால் மிகக் களைப்புண்டவர்களாய் அவ்விடத்தில் தரையில் துணியை விரித்துட்கார்ந்தார்கள். உட்கார்ந்ததும் கொஞ்சநேரத்துக்கெல்லாம் அவ்விடத்தில் கந்தகம் முதலிய கலந்ததான ஒரு விதப் புகைசூழ்ந்து அக்கினிக் காற்று வீசியதால் அவ்விடம் இருந்தவர்களெல்லாம் இக்கஷ்டத்தைப் பொறுக்கமுடியாமல் நாலாபக்கமும் சிதறி ஓடிப்போனார்கள். ப்ளினியும் எழுந்திருக்க வேண்டியதாயிற்று. அவர் சிநேகிதரது உதவியால் எழுந்திருந்த உடனே கீழேவிழுந்து இறந்துவிட்டார். இவருக்குச் சுபாவமாய் அடிக்கடி மூச்சு அடைத்துக் கொள்ளும் ஓர் வியாதி உண்டு. அப்போது வீசிய கந்தகக் காற்றாலோ, அல்லது அதைப் போன்று வீசிய விஷசம்பந்தமான காற்றாலோ, உடனே மூச்சுத்திணறி உயிரைவிட்டதாகக் காண்கிறது. இக்கேடு சம்பவித்த மூன்றுநாள் வரையில் அந்தகாரம் நீங்கவில்லை. பிற்பாடு வெளிச்சம் உண்டான உடனே இவர் தேகத்தைப் பார்த்ததில், கொஞ்சமேனும் காயமுதலியன ஒன்றுமில்லாமல் முதலில் விழும்போது எப்படி இருந்ததோ அதேமாதிரி இருந்தது. உறங்குபவர்போலத் தோற்றியதே ஒழிய உயிரொழிந்து மாண்டவராகக் காணப்படவில்லை.

இவ்வாறு இவர் இவ்விடத்தில் மாண்டு கிடக்க, மைஸீனத்தில் என்ன நடந்ததென்று சற்று விசாரிப்போம். பெரிய ப்ளினியானவர் மலையை நோக்கிப் பிரயாணமாய்ப் போகையில், சிறிய ப்ளினியும் அவர் தாயாராகிய பெரிய ப்ளினியின் சகோதரியும் வீட்டில் இருந்தார்கள். அன்று இரவு போஜனமான பிற்பாடு சிறிய ப்ளினி சற்றே ஏதோ வேலையாயிருந்து படுக்கைக்குப்போனார். ஆனால் கொஞ்சமேனும் தூக்கம் வரவில்லை. கொஞ்சகாலமாய் அவ்விடத்தில் பூமி நடுங்கிக்கொண்டேயிருந்தது. இருந்தும் அவ்விடத்தில் பூகம்பம் அடிக்கடி உண்டாவதால் அவ்விடத்து ஜனங்கள் அதைச் சாதாரணமாக வழக்கமாய் உண்டாவதைப்போல நினைத்து அவ்வளவாக அதைப்பாராட்டாமல் அச்சமற்றிருந்தார்கள். ஆயினும் இந்த அதிர்ச்சியானது வழக்கமாய் இருப்பதுபோல் இராமல் சற்று நேரத்துக்குள் பூமியானது அதிகமாய் ஊசலாட ஆரம்பித்து, கொஞ்சநேரத்தில் வீடுகளெல்லாம் ஆடும் ஆட்டத்தால் சரிந்து விழுந்து நொருக்குண்டு நாசமாய் விடுமென்று தோன்றியது.

இதன் அபாயத்தை அறிந்து சிறிய ப்ளினியும் அவர் தாயாருமாகப் பொழுது விடியு முன்னமே கடற்கரை யோரமாயுள்ள ஒரு திறந்த வெளியில் வந்துசேர்ந்தார்கள். பொழுது விடிந்ததும் கதிரோன் ஒளி இல்லாமல் கார்மேகம் கவிந்ததை யொப்ப எங்கும் சற்றே இருளாயிருந்தது. இவர்களைச் சுற்றிலும் இருந்த வீடுகளெல்லாம் ஊசலாடிக்கொண்டிருந்தன. ஆதலால் இவ்வெளியில் நின்று

லும் ஏதாவது அபாயம் நேரிடக்கூடுமென்று நினைத்து ப்ளினியும் அவர் தாயாரும் அவ்வூரை விட்டு வெளியேபோய் வேறு அபாயமில்லாத இடத்திற்குப் போகலாமென்று புறப்பட்டார்கள். இவ்வாருக அந்த ஊரில் மிகவும் முக்கியமானவர்களும் புத்திமான்களுமாகிய இவர்கள் புறப்படவே, ஏது செய்கிறதென்று ஒன்றும் தோன்ருமல் தியங்கித் தடுமாறி நின்றுகொண்டிருந்த மற்ற ஜனங்கள் எல்லோரும் ஒருவர் பின் ஒருவராக இவர்களைப் பின் பற்ற ஆரம்பித்தார்கள். ஆகவே, இவர்களிருவரையும் சுற்றி நாற்புறத்திலும் ஜனங்கள் திரள் திரளாய்க் கூடிக்கொண்டபடியால் கொஞ்ச தூரங்கூடச் செல்ல முடியவில்லை. மேலும், வெளிப்புறங்களிலும் பூகம்பம் அதிகரித்து வந்தபடியால், அவ்விடங்களிலும் அதிக அபாயம் இருக்குமென்று தோன்றிற்று. அவர்கள் கட்டளையால் கொண்டுவரப்பட்ட வண்டிகள் சமநிலத்தில் கூட நின்ற விடத்தில் நிற்காமல் முன்னும் பின்னுமாய் ஓடி ஊசலாடிக்கொண்டிருந்தன. பெருங் கல் துண்டுகளைத் தடையாக வைப்பினும் அவைகள் ஒரே இடத்தில் நின்றபாடில்லை. இப்படி உண்டான அதிர்ச்சியால் கடல் பின்வாங்கிக் கரையைவிட்டு உள்ளே வெகுதூரம் போய்விட்டது. இதனுல் நீரில்வாழும் பிராணிகள் அனேகம் உலர்ந்த தரையில் ஒதுக்கப்பட்டுக் கிடந்தன. இம்மலையிலிருந்து அடிக்கடி மேலே எழும்பிவருவதும் முன்னமே குமிப்பித் திருப்பதுமான புகைப்படலமானது தேவதாரு மரத்தையொத்து, ஆவியாலும், தூசு தும்புகளாலும், நெருப்புக் கற்களாலும் அமைந்ததாய் மலையின்பேரில் ஒரே ஸ்தம்பாகாரமாய்க் கிளம்பி நின்று மேலே சுற்றுப்பக்கத்துப் பிரதேசங்களை ஒரே வளைவாய் வளைத்துக்கொண்டது. இவைகளில் தோன்றிய மின்னற் கொடிகளோ அதிக பிரகாசமும், சாமனிய மின்னல்களைக் காட்டிலும் நீளமுள்ளவைகளாயு மிருந்தன. மேலும், அதிக பிரகாசமுள்ள நெருப்புத் தழல்களும், ஏராளமான சாம்பலும், உருகிய பளபளப்பான கற்குழம்பு வெள்ளமும், உலைவாயிலிருந்து சுற்றிலும் கக்கப்பட்டன. மலையிலிருந்து வீசப்பட்ட நுண்ணிய அணுக்கள் ஆகாயமெங்கும் பரவி அவ்விடத்திய பிரதேசங்களில் மூன்று நாட்கள் வரையில் இருளா யிருந்தது.

இக்கொடிய கொதிப்பினுல் உண்டாகிய பிராணச்சேதமும், அழிந்து நாசமுற்ற பட்டணங்களும், கிராமங்களும் அனந்தம். இக்காரிருளால் உண்டாகிய குழப்பத்தினுல் ஜனங்கள் நிலைதடுமாறி இருந்தார்கள். இருட்டென்ருல் இது சாமானிய இருட்டாகுமா? ஒரு அறை அல்லது குகையின் வாயிலை மூடிக் கொஞ்சமேனும் உள்ளே சூரியரஸ்மி எவ்விதத்திலும் வராதபடி தடுத்திருந்தால் அது எவ்வளவு இருளாயிருக்குமோ அதை ஒத்ததாயிருந்தது. சாதாரணமாய் நக்ஷத்திரங்களால் அலங்கரிக்கப்பட்டுத் தண்ணொளி பரப்பி வெண்மதியுலாவப் பெற்ற இரவையும், அனலொளி காட்டி அதிகாந்தி வீசும் பகலவன் பொழுதையும் ஒழித்து, ஊழி காலத்தை ஒப்ப மூன்றுநாள் வரையில் கன்னங்கரிய காரிருள் ஊர்களடங்கலும் கவழ்ந்ததேல் ஜனங்கள் நிலைமயங்கி, நடுத்தடுமாறித் திண்டாட்டம் கொள்வதற்கும் ஐயமுண்டோ? அவர்கள் பட்ட துயரத்திற்கும் பெருங்கஷ்ட நஷ்டங்களுக்கும் நிகருமுண்டோ? அவ்விருள்,

'ஆலமுலகிற் பரந்ததோ வாழிகிளர்ந்ததோ
வவர்தம்
நீலநிறத்தை யெல்லோரு நினைக்கவதுவாய்
நிரம்பியதோ
காலனிறத்தை யஞ்சனத்திற் கலந்துகுழைத்
தாகாயத்தின்
மேலு நிலத்து மெழுகியதோ விளக்கு
மிருளாய் விளைந்ததுவே'

என்று கம்பர் பாடியதற்கு இசைந்ததாயிருந்தது.

இச்சமயத்தில் உண்டான கொடுந்தீயினுல் மாண்டவர்கள் அனேகர். வீடுகள் தீப்பற்றி அதிலுள்ளவர்களுடன் எரிந்து நீருகியும், பூகம்

பங்களின் கேட்டினல் வீடுகள் இடிந்து விழுந்து அவற்றுள் வாசமாயிருந்த மனிதர்களுடன் நசுங்கியும், வெளியே ஓடிப்பிழைப் போமென்று ஓடியவர்களில் சிலர் உருகிய கற்குழம்பு வெள்ளத்தில் அகப்பட்டு மாண்டும், சிலர் பெருங்கற்றுண்டுகளால் புடைப்புண்டு விழுந்து இறந்தும், சிலர் அக்கினி வஸ்துக்களால் எரியுண்டு வீழ்ந்தும், சிலர் விஷ ஆவிக் காற்றுகளாலும், புகையாலும் மூச்சுத்திணறுண்டு மாண்டும், இவ்வாறு அனேக கஷ்டங்கள் நேர்ந்தன. இவ்விதமாய் அனேக ஊர்வன, பறப்பன, நடப்பனவாகிய பட்சி, மிருக முதலான ஜீவராசிகள் உயிர்துறந்தன. புல், பூண்டு, செடி, கொடி, மரம் முதலிய யாவும் எரிக்கப்பட்டு அந்த பிரதேசம் முழுதும் சாம்பல்காடுபோல் விளங்கியது.

இச்சமயத்தில் அவ்விடமெல்லாம் ஆண்மக்கள் உரத்துக்கூவும் ஓசையும், பெண்பாலரின் அழுகுரலும், குழந்தைகளின் வீரிட்டழும் ஓசையுமே பரவிக் காதுகளை அடைத்து எங்கும் ஒரு பெருங்குழப்பமாக்கிவிட்டன. குழந்தைகள் அழுகுரலைக் கேட்டு அவர்களுக்கு ஆதரணை புரிய வகையற்றவர்களாய் தவித்து நின்றார்கள் சில தாய் தந்தையர். வயோதிகரான பெற்றார் உற்றார்கள் திண்டுமுண்டாடித் தவித்துக் கூவியழுவதைப் பொறுக்க முடியாராய்ப் பிரலாபித்து உள்ளமுருகி அழுதனர் சில சிறுவர் சிறுமியர். இவ்வுலக இன்பத்தையும், பெண்டு பிள்ளைகளையும், ஆஸ்திபாஸ்திகளையும், ஒருங்கே துறந்து உயிர் மாய்வதெப்படி என்று நினைந்து நினைந்து கரைந்தழுதனர் சிலர். தங்கள் குடும்பம் எல்லாம் ஒருங்கே படும் அவஸ்தையைச் சகிக்கமாட்டாதவர்களாய் வயிற்றிலேயும் வாயிலேயும் புடைத்துக் கொண்டவர்கள் சிலர். ஊழிகால அந்தகாரமோ வந்து விட்டது: ஆண்டவன் முன் நின்று அவர் ஆக்கினைக்கு உத்தரமளிக்க ஏற்பட்ட நாளும் கிட்டிய தென்று பயந்தார் பாபியர் சிலர். ஆ! தேவனே, எங்களுக்கு இக்கொடுமையை விளைவிப்பதேன்; ஆ! சர்வ ஜீவகாருண்யனாகிய கடவுளே, எங்களை இப்பெருந் துயரத்திலிருந்து காத்து ரக்ஷித்து இவ்விருளை நீக்க உம்மால் முடியாதாவென்றும், யாம் செய்த பிழைகளைப் பொறுத்து எங்களை ஆதரியும் என்றும் பலவாறாகச் சொல்லிக் கடவுளைத் துதித்து வேண்டுவோரும் உளர் சிலர். மற்றுமுள்ளவர்களோ இதேது பிரளய காலந்தான் வந்து விட்டதென்றும், இனி இவ்விருளினின்று தப்பிப் பிழைப்பது அரிதென்றும் பூலோகமுழுதும் ஒரே அடியாய்த் தொலைந்து போய்விடும் என்றும் எண்ணினர்கள்.

> 'வரைகலங்க வனங்கலங்கக் கலங்குறாத மண்
> கலங்க விண் கலங்க மகரமுந்நீர்த்,
> திரை கலங்கத் திசை கலங்க வீறிலாத செகங்
> கலங்க வுகங்கலங்கச் சிந்தை தூயோர்,
> உரை கலங்க வுளங்கலங்கத் துளங்கிமெய்யி
> லூன்கலங்க விலங்கொடு புள்ளினங்கள் யாவும்,
> நிரைகலங்க வுலகினுயிர் படைத்த தம்மினிலை
> கலங்காதன வுண்டோ நிகழ்த்தினம்மா.'

இவ்வாறாக ஒரு பெருங் குழப்பமிருந்து கொஞ்சங் கொஞ்சமாய் இருள் நீங்கி ஜனங்களுக்குள் ஓர் தைரியமும் அமைதியும் உண்டாக, கதிரவனும் பிரகாசிக்கலுற்றான். ஆயினும், ஆகாய மண்டலத்தைக் கவிழ்ந்துகொண்டிருந்த நுண்ணிய அணுக்களின் குணங்களாலும், கந்தக முதலான ஆவிகளின் தன்மையாலும், சூரியன் பிரகாசமற்று கிரகணமுண்டாய காலத்து விளங்குவதுபோல் ஒளி மழுங்கிக் கிடந்தான். இதைப் பார்க்க எரிமலைக் கொதிப்பினல் நாடு நகரங்களுக்கும், ஜீவகோடிகளுக்கும் உண்டான இப்பெருந்துயரம் சூரியனையும் பற்றியது போலத் தோற்றியது. அந்தகாரம் ஒழிந்து மலையின் கொதிப்பும் அடங்கவே மலையைச் சுற்றிலும் அதிக தூரம்வரையில் நிலமானது பனியை யொப்ப வெண்ணிறமான போர்வை போட்டதுபோல் எங்கும் சாம்பலால் மூடப்பட்டிருந்தது.

## புதையுண்ட நகரங்கள்.

இவ்வளவு விபத்துகளும், நஷ்டங்களும், உண்டானதற்குக் காரணம் எரிமலையின் கொ

திப்பே. இம்மலையில் உண்டான வெடிப்பின் அதிர்ச்சியாலும், பூகம்பங்களாலும், கொதிப்பினாலும் முன்னமே சொல்லப் பட்டிருக்கும் 'எர்குலானியம்' (Herculaneum) 'பாம்பியை' (Pompeii) என்னும் நகரங்களும், மலைக்குத் தென்புறத்தில் தற்காலத்திய 'காஸ்டல்லாமேர்' (Castellamare) என்னும் பட்டணம் இருக்கும் ஸ்தானத்தில் அப்போது இருந்த 'ஸ்டாபே' (Stabae) என்னும் பட்டணமும் இருந்த இடமே தெரியாமல் முற்றிலும் மூடப்பட்டுப் பாழாக்கப் பட்டன. இப்பட்டணங்களிலுள்ள ஜனங்களில் அனேகர் கொதிப்பெடுக்கு முன்னும், கொதிப்பெடுத்த உடனும் ஓடி உயிர் தப்பினார்கள். இப்பட்டணங்கள் கற்குழம்பு வெள்ளத்தில் முழுகி நாசமானவைகளாகக் காணப்படவில்லை. கற்குழம்பு வெள்ளத்தாலும் சாம்பல் மாரியாலும் வீடுவாசல்களிலுள்ள சந்து பொந்துகளெல்லாம் நிறைந்து தூர்ந்துபோவது சாத்தியமா யிருந்திராது. இம்மலையிலிருந்து நெருப்பு மழை வருஷித்தபோது வெளியே வந்த நுண்ணிய தூசு மண் முதலிய வஸ்துக்கள், மலையிலிருந்து ஏராளமாய் வெளியே கக்கப்பட்ட நீராவியுடன் கலந்து மண்ணீராய் மாறி பெரு வெள்ளமாய் மலைச்சரிவுகளில் பிரவாகித்து வீடுகளையும் கிராமங்களையும் முழுக அடித்ததாகத் தற்காலத்திய சோதனைகளால் தெரிய வருகிறது.

இந்தப் பட்டணங்கள் நாசமடைந்து ஏறக்குறைய 1700-வருஷங்கள் வரையில் இவைகள் இருந்த இடமே தெரியாமலிருந்தது. சென்ற 1738-ம் வருஷம் சில வேலைக்காரர்கள் ஒரு கிணறு வெட்டிக்கொண்டிருக்கும் போது அடியில் ஏதோ ஒரு கட்டிடத்தின் மேற்றரை தென்பட்டது. இது என்னவென்று முழுதும் வெட்டிப் பார்த்ததில் 'எர்குலானியம்' நகரத்து நாடகசாலை மண்டபமென்று கண்டு பிடிக்கப்பட்டது. ஆனால் தற்காலத்திய தரை மட்டத்திற்கும் புதையுண்ட பட்டணத்தின் தெருமட்டத்திற்கும் சில விடங்களில் 70-அடியும் சிலவிடங்களில் 100-அடி ஆழமும் இருக்கிறபடியால் மண்ணை வெட்டி வெளியே கொண்டுபோய்க் கொட்டுவது அசாத்தியமாயிருக்கிறது. ஆனதுபற்றி நாடகசாலையைப்போல மற்ற விடங்களையும் சோதனைசெய்து வெளியாக்கவில்லை. இது மாதிரியாகவே 1748-ம் வருஷம் பாம்பியை நகரத்தை வெட்டிப் பரிசோதிக்க ஆரம்பித்தார்கள். ஆனால் அடிக்கடி இந்த வேலையைக் கைவிட்டு விட்டபடியால் ஒன்றும் சரியாக முடியவில்லை. பிற்பாடு 1861-ம் வருஷம் 'இத்தாலியா' தேசத்து இராஜாங்கத்தாரால் இவ் வேலை மேற்போட்டுக் கொள்ளப்பட்டு விசேஷமாய் வெளியாக்கப்பட்டு வருகிறது. இவைகள் இறுதியாய், கிறிஸ்து பிறந்த முதல் நூற்றாண்டில் இருந்த உரோமர்களுடைய நடை உடைபாவனைகளைக் குறித்தும், அவர்கள் உபயோகப்படுத்திய பாத்திரம், தட்டுமுட்டு சாமான்களைக் குறித்தும், அவர்கள் வசித்திருந்த வீடுகளின் ஏற்பாடுகளைக் குறித்தும், அவர்கள் சிற்ப சாஸ்திரத்தில் அடைந்திருந்த தேர்ச்சியைக் குறித்தும், அவர்கள் அக்காலத்தில் அடைந்திருந்த சீர் திருத்தத்தைக் குறித்தும் அதிக விவரமாய் நமக்கு அறிவிக்கும் அறிகுறிகளாக விளங்குகின்றன. இவ்வாறாக மூடுண்ட இப்பட்டணங்களின் மேற்றரையில் புல், பூண்டு, செடி கொடி, மரங்கள் முதலிய முளைத்து, வீடு வாசல்கள் கிராமங்கள் முதலியன ஏற்பட்டு ஜனங்கள் தலைமுறை தலைமுறையாய் இவ்விடம் வசித்து அனேக காலம் சென்ற பின்னர் தற்செயலாய் இப்பட்டணங்கள் வெளிப்பட்டன. ஆனால் கி. பி. 63-ம் வருஷத்தில் உண்டான பூகம்பங்களினால் இவைகள் விசேஷமாய் இடிந்து பாழானதாகவும், மறுபடி முழுதும் புதிப்பிப்பதற்கு முன்பாகவே 79-ம் வருஷத்தில் மலையில் உண்டான மேற்சொல்லிய பெருங்கொதிப்பினால் இப்பட்டணங்கள் முழுதும் நாசமாக்கப் பட்டதாகவும் சரித்திர மூலியமாய் தெரியவருகிறது.

## 1631-ம் வருஷத்தில் நேர்ந்த பெருங் கோதிப்பு.

இந்தக் கொதிப்புக்குப் பிற்பாடு தற்காலம் வரையில் இந்த மலையில் ஏறக்குறைய 60-கொதிப்புகள் வரையில் உண்டாயிருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. 17-ம் நூற்றுண்டின் கடைசியில் இம்மலையானது, 79-ம் வருஷத்தில் நேரிட்ட கொதிப்புக்கு முன்பாக எவ்வளவு நேர்த்தியான காட்சியுடன் தோற்றப்பட்டதோ அவ்வளவு நேர்த்தியான காட்சி அமைந்ததாக இருந்தது. 5-மைல் சுற்றளவுள்ள அதன் உலைச்சுவர்முழுதும் மரங்களாலும், செடி கொடிகளாலும் மூடப்பட்டிருந்தது. மலையின் அடிவாரச் சுற்றுப்புறங்களோ ஆடு, மாடு முதலிய விலங்கினங்கள் மேய்வதற்குத் தகுந்த புல் பூண்டு மைதானங்களாகவும், காட்டுப்பன்றி முதலியன தங்கும் புதர்களாகவும் இருந்தன. ஆனுல் மலையின் சிகரமாகிய உலைவாய்ப் பாகமானது சாம்பலாலும் அங்கு மிங்கும் உஷ்ணமான உவர்நீர் தேங்கி நிற்கும் குட்டைகளாலும் நிறைந்திருந்தது. இவ்வாறிருக்கக் கடைசியாய் 1631-ம் வருஷத்தில் சற்றேறக்குறைய ஆறுமாதவளவு பூகம்பங்கள் அதிகமாய் உண்டாய்க்கொண்டிருந்து வரவர அவைகள் கொடுமையில் அதிகரித்து அவ்வருஷம் டிசம்பர்மாதம் 16-ம் தேதி திடீரென விசூவியஸ் மலையானது வெடிப்பெடுத்துக் கொதிக்கத் தலைப்பட்டது. மலையின் உலை வாயிலிருந்து வெளியே வீசப்பட்ட மேகங்கள் போன்று அடர்ந்து பரந்தவைகளாயிருந்த மண் கல் முதலிய சேர்ந்த தூசுப்படலமானது வானத்தில் அதிக உயரம் கிளம்பி நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் போய்விழுந்தது. இவற்றிலிருந்த நுண்ணிய வஸ்துக்களோ 'துருக்கி' (Turkey) தேசத்து தலைமை நகராகிய 'கான்ஸ்டான்டிநோபில்' (Constantinople) பட்டணத்தில் விழுந்தனவாம். இம்மலையிலிருந்து வெளியே வந்த ஏராளமான நீராவியோ தண்ணீராய் மாறி, சாம்பல் முதலியவற்றுடன் கலந்து பெருமண்ணுறுகளாய்ப் பெருக்கெடுத்துச் சுற்றுப்பக்கத்துச் சமவெளிகளையெல்லாம் வெள்ளத்தால் முழுக்கடித்தது. இவ்வெள்ளம் 'இத்தாலியா' தேசத்தை ஊடுருவிச்செல்லும் 'அப்பென்னைன்' (Appennines) மலை அடிவாரம் வரையில் சென்றதாம். மலையின் உலைவாய் விளிம்பிலிருந்து பெருகிய கற்குழம்பு வெள்ளமோ மேல்புறமும் தென்புறமுமாய் ஓடிச் சமுத்திரத்தில் 12, 13 இடங்களில் அருவிகள் போலப் பாய்ந்தனவாம். கொதிப்புக்கு முன்னமே நேரிட்டுவந்த பூகம்பங்களினுல் பின்னர் வரப்போகும் ஆபத்து ஜனங்களுக்குத் தெரிந்திருப்பினும், மலையானது திடீரெனக் கொதிப்பெடுத்ததனுல் தப்பிப்பிழைக்க வகையற்றவர்களாய் ஏறக்குறைய 18,000-பேர்கள் வரையில் மாண்டதாகத் தெரியவருகிறது.

## மலையின் பிற்காலத்திய ஸ்திதி.

இந்தப்பெருங்கேட்டுக்குப்பிறகு விசூவியஸ் மலையானது முற்றிலும் வாய்மூடினதாக இல்லை. அது முதற்கொண்டு சொற்பகாலத்திற் கொருதரமாக அடிக்கடி நீராவி, தூசு, உருகின உலோகக் களிம்பு, அல்லது கற்குழம்பு முதலியவைகளைக் கக்கினவண்ணமாயிருக்கிறது, 1766-67, 1779, 1794, 1822, 1872, இந்த வருஷங்களில் இந்த மலை விசேஷமாய்க் கொதிப்பெடுத்தது. இக்கொதிப்புகளில் கண்ட காட்சிகளைக்குறித்து விவரமாய் எழுதப்பட்டிருக்கிறதாயினும், எரிமலைகளின் தன்மைகளைக்குறித்து அறிந்துகொள்ள மேலே சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களே போதுமாதலின் விரிவஞ்சி விடுக்கப்பட்டன. 1872-ம் வருஷத்தில் எடுத்த கொதிப்பைக் குறித்து முன்னமே குறிப்பிட்டிருக்கிறேம்.

## சோதி மண்டபம்.

இம்மலையின் தாழ்ந்த சரிவுகளில் ஓர் பக்கத்தில் சோதிமண்டபமொன்று, எரிமலையின் செயல்களைக்குறித்து அப்போதைக்கப்போது குறிப்பிட்டுவர வெகு காலத்திற்கு முன்பா

கவே கட்டப்பட்டு துரைத்தனத்தாரால் ஆத ரிக்கப்பட்டுவருகிறது. இந்த மண்டபத்தில் வைக்கப்பட்டிருக்கும் அருமையான கருவிக ளால் மிகவும் சாமானியமான பூகம்பங்களும் கணக்கெடுக்கப்பட்டு அவைகள் எத்திசையை நோக்கி உண்டானவென்றும், அவைகளு டைய தீட்சண்ய மெவ்வளவென்றும், அவை கள்தோன்றிய பிற்பாடு உண்டாகும் அதிர்ச்சி யின் காலவளவு எவ்வளவென்றும் தெரிவிக் கப்பட்டு முன்னால் வரப்போகிற ஆபத்தை முன்னரே ஒருவாறு அறிந்துகொள்ளப்படு கிறது.

கம்பிவட இருப்புப்பாதை.

இந்த எரிமலையின் விசேஷங்களை பார்ப்ப தற்காக அடிக்கடி அவ்விடம்வரும் பிரயாணி கள் அடிவாரத்திலிருந்து மேமேல ஏறிப்போய் பார்த்து வருவதற்கு அதிக அனுகூலமாக அவ் விடத்தில் கம்பிவட இருப்புப்பாதை ஒன்று உளது. இதன்மூலியமாய் குழந்தைகள், கிழ வர்கள் முதற்கொண்டு யாவரும் வெகு சுலப மாய் மேலேபோய் உலைவாயின் அற்புதக் காட் சியைக்கண்டு களித்துவரலாம்.

விசூவியஸ் எரிமலையைக்குறித்த விஷயங் களை ஒருவாறு சொல்லிமுடித்தோம். இனி, எரிமலைகளைக்குறித்து எழுதியபோது அடிக் கடி சொல்லிவந்த பூகம்பங்களைக்குறித்து விவரமாய் எடுத்துரைப்போம்.

---

## TIT-BITS FOR CHILDREN.
## BLINDMAN'S BUFF AMONG NATIONS.
## சிறுவர்க்கான துக்கடாக்கதைகள்.
## "கட்டுக்கண்ணுமூச்சி விளையாட்டு."

குழந்தைகளே! உங்களுக்கு இம்முறை ஒருகதை சொல்லவேண்டும். "ஏறச்சொன் னால் எருதுக்குக்கோபம்; இறங்கச்சொன் னால் நொண்டிக்குக்கோபம்" என்கிற கதை யாக நான் தர்மஸங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். கதை சொல்லமாட் டேன் என்றால் பத்திராசிரியருக்குக் கோபம் வரும். நான்கண்டதைக் கேட்டதை அம்மை யார் கதையாக உங்களுக்குச் சொல்லுவோ மென்றால் "உள்ளதைச்சொன்னால் நொள்ளைக் கண்ணிக்கு நோப்பாளம்" என்கிறபடி "நொள் ளைக்கண்" உள்ளவர்கள் கோபத்துக் காளாக வேண்டும். நான் யாருக்கென்று பயப்படு வேன்? இதைப்பற்றிப் பத்திராசிரியரிடம் சொல்லிக்கொண்டேன். அவர் விவேகசிந்தா மணியரசாகையால், ஒரு குழந்தையைக் கூட் டிக்கொண்டுவந்து உங்களுக்கு பயம்நீங்க வழி சொல்லுகிறேன் வாரும் என்று அழைத்தார். அவருடனிருந்த குழந்தை "அண்ணா, வாருங் கள்; அவர் என்ன வழிதான் காட்டுகிறார் பார்ப்போமே!" யென்று கையைப் பிடித்தி ழுத்தது. நானும் சரிதானென்று கூடவே போனேன்.

ப்ரதோஷ காலவிசேஷம்.

அன்றைக்கு ப்ரதோஷநாள். (ப்ரதோ ஷம் என்றால் என்னவென்று உங்களுக் குத் தெரியுமோ, தெரியாதோ!) திரயோதசி யன்று சாயங்காலத்துக்கு 'ப்ரதோஷகாலம்' என்று சொல்லுகிறது. அக்காலத்தில் பக வான் 13 கலைகளோடுகூடி அபயமென்றடைந் தார்க்கு அஞ்சே லென்றுசொல்லி தரிசனம் கொடுக்கிறார் என்பது ஐதிகம். இதெல்லாம் வெறும்கட்டுக் கதையில்லை. பெரிய உண்மை களைக் கதைகளாக அமைத்துச் சொல்லப் பட்டிருக்கிறது. ப்ரதோஷகாலத்தில் பகவான் எளியார்க்கெளியனாய் தரிசனமளிக்கிறார் என் பதுமட்டும் நிஜம். திருமயிலையில் அறுபத்தி மூவர் உற்சவத்தின் உள்மர்மம் இதுதான். இது நிற்க.

அன்று ப்ரதோஷகாலத்தில் கோவிலில் தீபாராதனை நடந்தது. கண்டாமணி கணார் கணார் என்று அடித்து எல்லாரையும் தரிச னத்துக் கழைத்துக்கொண்டிருந்தது. ஜனங் களெல்லாரும் கூட்டமாக நின்று 'ஹரஹர' வென்றுசொல்லி கன்னத்தில் போட்டுக்

கொண்டு தீபாராதனை தரிசனம் செய்து கொண்டிருந்தார்கள். நாங்களும் அங்குபோனோம். அப்பொழுது அவர்களையெல்லாம் பார்த்து எனக்கும் பக்தியுண்டாயிற்று. தர்ம சங்கட முற்றபொழுது பகவான் தான் துணையிருப்பதாக அர்ச்சுனனுக்கு வாக்களித்திருக்கிறபடியால், "ஸ்வாமி, யாருக்கு பயப்படுவேன்?" என்று எண்ணிக்கொண்டே மனம் உருகிக்கொண்டிருந்த எனக்கு பகவான் இந்த ப்ரதோஷகாலத்தில் பிரசன்னமாகி (அப்படியென்றால், 'நேரில்தோன்றி' யென்றர்த்தம்) என் சங்கடத்தைத் தீர்க்கமாட்டாராவென்று தோன்றியது. அதை வெளியிடாமல் உள்ளத்தில்தானே உண்மையாக நினைத்துக்கொண்டிருந்தேன். "எண்ணினார்க் கெண்ணினபடியிருந்தருளீயுமீசன்" என்று பெரியோர் கூறியிருக்கிறார்களாதலால், அவர்வாக்குப் பொய்க்காமல் ஒரு அதிர்சய சம்பவம் நேர்ந்தது. அதென்னவென்றால் :—

## ஸ்வாமி தரிசனம்.

கற்பூரதீபம் எடுக்கும்பொழுது என்னையறியாமல் என்னெண்ணமெல்லாம் என் முன்னேயிருந்த மூர்த்தியிடத்தில் போய்விட்டதனாலோ, வேறு என்ன காரணத்தினாலோ, பெரியோர்கள்செய்த பூஜாபலம் காரணமாக எதிரிலிருந்த மூர்த்தியுரு அந்தக்கற்பூர தீபாராதனை காலத்தில் தேஜோமயமாகிக் கண்கொள்ளாக்காட்சியாய் விளங்கியது. அந்த திவ்யமங்கள தரிசனத்தைக்காணவும் நான் குழந்தைபோல் அன்பொன்று தவிர வேறெதையும் உணராதவனாய்விட்டேன். அப்பொழுது அந்த தேஜோமயாநந்த விக்ரஹரூபமாய் விளங்கியதேவதை அன்புருவேயாகி ஆனந்த வடிவாய் நிருத்தம்செய்து "அஞ்சாதே, அஞ்சாதே, நானிருக்கிறேன்!" என்று சொன்னதுபோல் உள்ளத்துவனிகிளம்ப, இதென்ன அதிர்சயமென்று மூடினகண்ணைத் திறந்து பார்த்தேன். அப்போது "அபயவரதம்"* என்றுசொல்கிற இருமுத்திரைகளையும் காட்டிக்கொண்டு அந்த ஆனந்தமூர்த்தி என் எதிரே சோதிவடிவமாய் நிற்கக்கண்டேன். "சோதியே, சுடரே, சொல்லிறந்த மதியே, ஆதி, யனாதியே!" என்று பெரியோர்கள் பாடித்துதித்ததின் அர்த்தமும் உண்மையும் எனக்கு அப்பொழுதுதான் சுருக்கென்று உள்ளத்திற் பதிய உறுத்தியது.

வலதுகையைத் தூக்கிவிரித்து ஹிருதய கமலத்துக்கு நேராகவைத்து "அஞ்சாதே!" யென்றுகாட்டிய அழகுகை என்னுள்ளத்தைக் கவர்ந்தது. இடதுகரம் அந்த திவ்யானந்த விக்ரஹமூர்த்தியின் பாதத்தைக் குறித்துக்காட்டி "நீ குழந்தை: நான் உன்னைப் பெற்றதாய்! என்காலைக் கட்டிக்கொள்: பயப்படாதேயடா அப்பா!" என்று அன்புகூர்ந்து சொன்ன பாவனையாக அந்த ஆனந்தவிக்ரகம் என் கண்முன்னே ஸ்தூல சூக்ஷ்மமிரண்டிலும் கலையாது அப்படியே நிற்கக்கண்டேன். கண்டுகளித்து உளங்தேறி இந்த அதிர்சயத்தைப் பத்திராசிரியரிடம் சொன்னேன். அதுவரையில் கூடவிருந்த குழந்தை திடீரென்று 'சொப்படிவித்தை' காட்டி மறைந்தாப்போல், மறைந்துபோக, "ஐயா, என்னைக் கூட்டியழைத்துவந்த குழந்தை யிங்கேயிருந்தபடி மறைந்துபோன அதிர்சய மென்ன" வென்று கேட்டேன்.

"அதிர்சய மொன்றுமில்லை: எல்லாம் திரிசயமாகத்தான் இருக்கிறது வாரும்" என்று பத்திராசிரியர் என்னைவீட்டுக்கு அழைத்தார்.

"அந்தக் குழந்தையைக் காணுமற்போக விட்டுப் பிரிந்துவர எனக்கு மனம் வரவில்லை" யென்றேன்.

அப்பொழுது அங்கேவந்த குருக்கள் "அக்குழந்தையை நான் காட்டுகிறேன் வாருங்கள்" என்று எங்களை அழைத்துப்போய் தண்டபாணியாய் ஸதானந்த மூர்த்தியாய் நின்றுகொண்டிருந்த சுப்பிரமணியக்கடவுளைத் தீபாராதனைகாட்டி தரிசிக்கச்செய்தார்.

* For particulars see "Elements of Iconography" by the Superintendent of Archealogy, Travancore State.

'கடடுக்கண்ணுமூச்சி.''†

''அப்படியா! அது!'' என்று சொல்லிக் கொண்டே வீடுவந்து சேர்ந்தேன். அன்று இராத்திரி ''கட்டுக்கண்ணு †மூச்சிவிளையாட்டு'' விளையாடினதாக ஒருதிவ்வியதரிசனம் கண்டேன். இதென்ன வேடிக்கை! ''மர்ஸா (Vision of Mirza) கண்ட உவமை தரிசனம்'' போல் இப்படிப்பட்ட விளையாட்டு விளையாடப் பார்த்தேனே; இது என்னகுறியோ, எது லக்ஷியமோ! ஒன்றும் தெரியவில்லையே யென்று மயங்கிக்கொண்டிருந்தேன். அப்பொழுது பத்திராசிரியர் ''அபயம்'' என்று தலைப்பெயரிட்டுத் தான் ஒரு விஷயமெழுதியதின் அச்சுக் காபியைக்காட்டி, குழந்தைகளுக்குக் ''கட்டுக்கண்ணுமுச்சி'' விளையாட்டின் கருத்தை இந்தவிசை அழகாய்ச்சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். மறுநாட்காலையில் ஐரோப்பா கண்டமெங்கும் ஒரேகாட்டுத்தீபோல் பரவத்தக்க யுத்தமொன்று ஆரம்பித்து விட்டதாகத் தெரியவந்தது. ('' Germany has declared war '') ''ஜர்மனி யுத்த ஸந்நத்தன் ஆய்விட்டது.'' என்கிற நாலு வார்த்தையில் புருஷார்த்தமெல்லாம் பாழாய்ப் போனதுபோலும் ஒரு பிரமாதயுத்தம் கிளம்பி விட்ட சமாசாரம் உலகெல்லாம் பரவிவிட்டது. லோகமாதா தேசாதிபதிகள் கண்ணைக்கட்டி 'கண்ணுமூச்சி' விளையாடவிட்டுப் பார்க்கிறாள்.

''கண்ணு மூச்சியாரே
''காட்டு மூச்சியாரே
''மோட்டு மூச்சியாரே
''எனக்கொரு பழம்
''உனக் கொரு பழம்
'கொண் டோடி வா''!

என்று ஜர்மனி சக்ரவர்த்தி கண்ணைக்கட்டி கண்ணுமூச்சி விளையாட விட்டுவிட்டாள். அவர் உருஷியா தேசாதிபதியைப்பிடிக்க அவர் கட்டுக்கண்ணுமூச்சி விளையாடுகிறார். இப்படியாக ஐரோப்பிய தேசாதிபதிகளெல்லாரும்கூடி கட்டுக் கண்ணுமூச்சி விளையாடுகிறார்கள். இதற்குக் காரணமென்னவென்று கேட்டால் ஆஸ்திரியா - ஹங்கேரி தேசத்துக்கும் ஸேர்வியா தேசத்துக்கும் விவாத முண்டாகிச் சண்டையிடத் தொடங்கினர்களாம். அதற்காகவென்று ஐரோப்பாவிலுள்ள தேசத்தார்களெல்லாம் கக்ஷிகட்டிக் கொண்டு நரமேதயாகம் செய்யக் கங்கணம் கட்டினர்போலும் ஜனங்களைப் போர்க்களத்தில் பலியிட்டு ஸர்வஸங்கார தீக்ஷை பெற்றுக்கொள்ளக் காத்திருக்கிறார்கள்.

''அறிவார் பராசக்தி ஆனந்த மென்பார்
அறிவார் அறிவுரு வாமவளென்பார்
அறிவார் கருமம் அவளிச்சை யென்பர்
அறிவார் பரனும் அவளிடந்தானே''

என்றார் பெரியோர்.

''ஏகைவசக்தி'' யென்றபடி எல்லாம் வல்ல பராசக்தி யொன்றே. அவள் தானே ஆனந்த வடிவாகவும், அறிவுருபமாகவும் இருக்கிறாள். இந்த இரண்டு ஸ்வரூபமும் ஸத்துக்களுக்கும் ஸாதுக்களுக்கும் தன்னை வென்ற தலைவர்களுக்கும் தான் தரிசனப்பேறு தரும். கருமத்தைச் செய்து கர்மபலனை யனுபவிக்கப் பிறந்தவர்களுக்கு குழந்தைக்குச் செவ்வெண்ணெய் போட்டும் செவிலித்தாய் போல், அவர்கள் செய்கர்மத்துக்குத் தக்கபடி கர்மபலனை யுண்டு பண்ணி ஊட்டுவிக்கும் பொறுப்பும் ''அவளிச்சை'' யென்று சொல்லப்பெறும் அவளது இச்சாசக்தியைப் பொறுத்ததாயிருக்கிற தென்பர் மேலோர். பரப்ரஹ்மசாக்ஷாத்காரம் பெற விரும்பும் ஸர்வஸங்கபரித்தியாகிகளும் அவளருட்சக்தியினலே பரமனைக் காணப் பெறுவர்.

இப்படியாக ஸர்வகாரண சக்தியின் திவ்விய மங்கள விக்ரஹமாக விளங்கும் அந்த பரதேவதை அவள் குழந்தைகளாம் தேசாதிதேச ராஜாக்களையெல்லாம் கூட்டி வைத்துக் கொண்டு ''கட்டுக் கண்ணுமூச்சி'' விளையாட்

† கட்டின கண்ணோடு விளையாடுகிற மூர்த்தி. மூச்சி என்பது மூர்த்தியின் மழலை மருவென்பர்.

விட்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறாள். அந்த அதிர்சயத்தை நான் "உவமை தரிசனமாகக் கண்டேன்" என்று சொன்னால் யார் நம்புவார்கள்? இக்காலத்தில் ஒருவரும் நம்பமாட்டார்கள். ஆனாலும் "Wireless telegraph" என்று சொல்லும் தந்தியில்லாத நந்திசோல்லோத்த சமாசாரம் ஒன்று வந்துவிட்டதென்றால் ஆயிரக்கணக்கான ஜனங்கள் அதை வாசித்துப் பார்த்துத் தாம் நேரிற் கண்டதுபோல் அந்தச் சமாசாரத்தை நம்பி நடக்க தினசரி சமாசாரப் பத்திரிகைகள் பிரசுரமாகும் அச்சாபீஸ் வாயிலில் காத்துக்கொண்டு கிடக்கிறார்கள். வித்தில்லாத மரமும் பற்றில்லாத பரமும் நேரில் பார்த்தபிறகுதான் (சாக்ஷாத்காரமான பின்னரே) நம்பி நடப்பதற்கு சாத்தியமாகுமென்பர். நம்பிக்கையின்றி நேரில்பார்ப்பதும் சாத்தியமில்லை: சாக்ஷாத்காரமாகாமல் நம்பி நடப்பதும் கஷ்டமே. ஆகையால் தான் "கட்டுக் கண்ணு மூச்சி விளையாட்டு" விளையாடிக் கண்ணில்லாமல் காணவும், காதில்லாமல் கேட்கவும், வழி காணாமல் நடக்கவும் கற்றுக்கொள்ள வேண்டும். மஹாபாரத யுத்தம் நடந்து முடிந்த பின்னர் தான் துரியோதனாதியர் கொட்டம் அடங்கியது. அதைப்போன்ற மஹாபாரதப் போர் இப்போகிளம்பியிருக்கிறது. ஆனந்தத் தாய் "கட்டு கண்ணுமூச்சி" கட்டிவிட்டு விளையாடிக்கொண்டிருக்கிறாள்.

"கட்டுக் கண்ணுமூச்சி" விளையாடும்போது சொல்கிற பாட்டுக்கு அர்த்தமென்னவென்று ஒரு பெரியவரைக் கேட்டேன். "அப்பா அதை யேன் கேட்கிறாய்? அர்த்தத்திற்கு அனர்த்தம் செய்யு மிக்காலத்தில் அது உனக்கேன்?" என்றார். "ஸ்வாமி, சொல்லுங்கள்! பாதகமில்லை!" யென்றேன். அதன்மேல் அவர் சொன்னது இது:—

(1) "கண்ணுமூர்த்தியாரே!—(குருடருக்குக் கோலுதவும் தேவதையே) கண்ணை மூடிவிட்டேன் என் குழந்தையைப் பார்த்துக்கொள்.

(2) காட்டு மூர்த்தியாரே!—(வனதேவதைகாள்) வழிகாணத் தெரியாமல் நீ காட்டும் வழி பற்றிச்செல்லும் என் குழந்தையைப் பார்த்துக்கொள்.

(3) மோட்டு மூர்த்தியாரே!—(மலைமேல் வசிக்கும் உத்தமேசிகரே தேவி!) மேடுபள்ளம் தெரியாமல் ஓடும் என் குழந்தையைப்பார்த்துக்கொள்.

(4) எனக்கோருபழம்.—உன்னைப்பெற்ற எனக்குப் பெரும்பயன் உண்டாக ஒப்பற்ற பழமாம் பிரசவ துக்க நிவாரண காரியான ‡ "அன்பாங்கனி" "கொண்டோடிவா".

(5) உனக்கோரு பழம்.—கர்மபந்தத்தால் கட்டுப்பட்டுத் துக்கமும் துன்பமுமே யனுபவிக்கப் பிறந்த உனக்கு அதிலிருந்து விடுதலை கொடுக்கும் துக்க விமோசன காரியான ஆனந்த மரத்தின் உச்சியில் காய்த்துப் பழுத்து உதிரும் சுககனமான பழமொன்று "கொண்டோடிவா."

இப்படியாக திவ்ய தேஜோமயானந்த, மங்கள விக்ரஹமாக விளங்கும் லோகமாதாவாம் பராசக்தி தம்குழந்தைகளோடு "கட்டுக் கண்ணு மூர்த்தி விளையாடும் லீலா விநோதத்தை" (Mirza) மெர்ஸா கண்ட உவமைதரிசனம் போல் நீ தரிசனமளிக்கப் பெற்றாய்!" என்று சொன்னார் அப்பெரியவர்.

இதைச் சொன்னால் குழந்தைகளுக்கு அர்த்தமாகா தென்பார் சிலர். ஆனால் பள்ளிப் பிள்ளைகளும் வீட்டில் குடித்தனம் செய்யும் பெண்டீர் பிள்ளைகளும் காலை, மாலை இரண்டு வேளையன்றி உச்சி காலத்திலும் ஒரு தந்தி சமாசாரம் வந்தால் அது என்ன வென்று கேட்கிறார்கள், அவர்களுக்கு ஸெர்வியா தேசமும் ஆஸ்திரியா-ஹங்கேரி தேசமும் மற்ற இதர தேசங்களும் இருக்கு மிடமாவது அத்தேசங்

‡ cf. "பெற்றுப் பெற்றலுத்தா ளென்தாயும் பிறந்து பிறந்தலுத்தேன் நானும்" என்றார் பெரியோரும்.

களின் அக்கப்போர் சமாசாரமாவது தெரியாது. "யுத்தம் நடக்கிறதா? எப்படி நடக்கிறது?" என்று கேட்கிறார்கள். இவன் அவன் கப்பலை யுடைத்தான். அவன் இவன் நகரில் ஆகாசரதத்திலிருந்து வெடிகுண்டைப் போட்டுக் ஊரைப் பாழாக்கினன். அங்கே ஒரு சைனியமழிந்தது. இங்கே யொரு பட்டணம் பாழ்த்தது-என்று வரும் தந்தியைக் கேட்டு ஆச்சரியப்படுகிற குழந்தைகள் தேசாதி தேசங்களையெல்லாம் சூத்திரப்பாவைபோல் கட்டியாட்டும் தேவி "கட்டுக்கண்ணு மூர்த்தி விளையாடுகிற லீலாவிபூதியைச் சொன்னல் கேட்கமாட்டார்களா" வென்று கண்டதைக் கண்டபடி சொன்னேன். காதிருந்து கேட்டவர் கேட்கட்டும். காதிருந்தும் கேளாதவர் அதைத் தள்ளட்டும். என்னிடத்தில் யாருக்கும் வர்மம் வேண்டாம். "கள்ளத்தனம் செய்தால் குள்ளநரி யாகவேண்டும்" என்பர் மேலோர்.

அவையடக்கம்.

ஒரு பெரியவர் தான் கண்டதைக் கண்டபடி ஸாதுசங்க சாக்ஷியாகச் சொல்லிக்கொண்டிருந்தார். அப்பொழுது, 'தப்பிலிப்பசங்கள்' பலபேர் அவர்களைச்சுற்றிக் கூட்டங்கூடி நின்றுகொண்டிருந்தார்கள். ஸாதுக்கள் சிரவண முறையால் அவதானமாகக் கேட்டு "மனனம்" செய்து கொண்டிருக்கையில், போக்கிலிகள் 'கெக்கொலி' கொட்டிச் சிரித்தார்கள். அப்பொழுது அவர் சாதுக்கள் கவனம் கலையாமலிருக்க வேண்டியதின்பொருட்டுக் குறிப்பாக ஒரு பாட்டுச்சொன்னார். அது இது:—

"கண்டேன் கண்டதைக்
கண்டபடி நானுரைத்தால்
காணுதைக் கட்டியழும்
கண் கெட்ட குருடரெல்லாம்
பேயென்றும பித்தென்றும்
பரிகாசம் செய்கிறார்கள்:
பேயென்றாலென்ன!
பித்தென்றாலென்ன!
பரம் பொருளெல்லாம்
ஒன்று தானே!"

யென்று சொல்லி, அப்பியாச புருஷர்களுக்கு அபேதபாவனம் உண்மையவதானத்துக்கு இன்றியமையாததென்பதை வற்புறுத்தினார். இந்த விவேகசிந்தாமணியரசும் ஆதியில் அதையே சாதனமாகக் கைக்கொண்டனுஷ்டித்து வந்ததாகத் தெரிகிறது. பழைய புஸ்தகங்களின் முதற்பக்கத்தலையேட்டில் பின்வரும் இப்பாட்டு அச்சிட்டிருக்கக் காண்கிறோம்.

"கற்றோர்கள் தாமுகப்பர் கல்விதனில் ஆசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

இப்படிக்கு,
உங்கள் அன்புள்ள,
குட்டி யண்ணு.

---

## * TRANSFUSION COLUMN.

["If a combined, honest and sustained effort is made to *transfuse* (not merely *translate*) good English...into Tamil, the effect will be to assist and stimulate greatly the study of both languages."—*Dr. G. U. Pope.*]

### மொழிபெயர்ப்பு வித்தை.

(1) எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.

Thought and Language are the very eyes (*i.e.*, true expressions) of the soul.

(2) "விண்ணவனை நண்ணினர்க் கெண்ண மெல்லாம் கண்ணாகும்."

"The thoughts of those that have approached *the Light*
Are all transformed into *visions bright.*"

---

* "No exercise of faculty is better and nobler for *a real* man than that of struggling with great thoughts, and labouring to express them in such a way that they shall reach the heart, instruct the mind, stimulate the best feelings, and elevate the whole being of their fellow men around them!"—*Rev. Dr. G. U. Pope* on the "Vivekachintamani Series."

## WOMEN'S THOUGHTS. ஸ்ரீபாவம்.

*(From some women poets of England).*

### I. THE CHILD IN THE MANGER.

*(From " The Living Chalice" by Miss Susan Mitchell,)*

" His presence set the skies aflame,
As through the glittering zones He came,
The Heavenly Child as He swept by,
Snatched one bright bauble from the sky.
The Magi watched the heavens afar,
Saw in the blue a starry stranger,
But He whose playthings planets are
Lay innocently in the manger."

### I. அவதார மஹிமை.

"தோட்டியிற் பிள்ளை கிடக்கு'து பார்!"

---

"தொட்டியிற் பிள்ளை கிடக்கு'து பார்!
பட்டியில் மாடுபோல்; எட்டாத சூரிய
மண்டலத் துக்கப்பா லிருந்தவர் திவ்விய
லோகங்க ளூடேவந் திழிந்திங்கே கிடக்கிறார்!
ஆகாச மார்க்கத்தி லவர்கையிற் றூங்கிய
போக சுகமா'நீர்க் குமிழியின் தேஜஸும்
ஆகாசத் தேபுது நக்ஷத்ர மாகவே,
யோகிநற் சித்தர்கள் ஆகாசத் தேயந்த
விண்மீ னொளிர்வதைக் கண்ணுற்றுக்காட்சியின்
உண்மை யுணரவே ஓடிவந் திங்குற்றார்!
தண்ணளி சுரந்து அண்டங்க ளையெல்லாம்
வண்ணமாம் பந்துபோல் விளையாடும் கையினர்
கண்மணி போலிங்கே தொட்டியிற் பாவையா
மண்ணுளோர் கலிதீர்க்க வந்தவ தாரமாய்
விண்ணி லொளிதானே விண்மீனாத் தோன்றியிம்
மண்ணிலே யவதார மானதைக் கண்ணுற்றார்.'

---

### II. "THE FRIEND."

" In the eyes of my friend
As he speaks to me,
Mirrored, reflected, I sometimes see,
Deep in their depth, and beneath his love,
The image of God.
" The Highest does send
His vast mystery
Veiled in the flesh we love to see ;
And while we fancy Him far above,
We have kissed our God."

—Marie C. Stopes, D.Sc., Ph. D., F.L.S.

### நண்பரிலன்பர் காட்சி.

Motto: "எண்ணினார்க் கெண்ணினபடி யிருந்தருளீயுமீசன்."

என் நண்பர் என்தோழர்
என்னோடு பேசும்போ
தென்னன்ப ரென்னண்ணல்
கடவுள்தம் பிரதிமையைநான்—
கண்ணினுட் பாவைபோலே
அண்ணல்தம் சாயையை
அவரன்பில் அவருள்ளக்
கருத்தினில் கருவின்நல்
மூலத்திற் கண்ணாடி
முன்போலே கண்டுநான்
மகிழ்கின்றேன் அன்பாலே!

பரமாய தேவர்தம்
பரமார்த்த உண்மையைப்
பாமரர் அறியவென்
றிதமாயவர் நேசித்தாரால்
இன்பூட்டிப் போதிக்கிறார்.
அண்ணலைத்தா னுணராதார்
அவரையதி தூரனாகப்
பாவித்திருக்கை'லே பரமனைநாம்
நண்ணியிங்கே அண்ணலாக
நல்முத்தம் கொடுத்து'ட்டோம்!
அம்மம்ம! அதிர்சயங்காண்!

---

## PRESS NOTICES.

THE VIVEKACHINTAMANI CHILDREN'S SPECIAL:—The July issue of this popular and attractive children's Magazine has a touching tale to tell of the feelings of children, for whom it devotes a large amount of space, issuing this month a special supplement under the above head which gives a full report of the proceedings of and the address adopted by the children assembled on the 14th July to give expression to their feelings of sorrow on the passing away of H. E. Lady Hardinge. An English version of the children's address has, we learn, been furnished to H. E. the Viceroy in person though the Military Secretary. There are other articles of varied interest and amusing stories and Readings from Nature, are written in easy flowing style to suit the requirements of children cultivating their own mother-tongue. The article on "the Sarving power of Faith which is Love" explains the purpose of the images in temples for the worship of the common people. The social study article on Respectability' is instructive as well as interesting, as also that on 'the self-made man.' Tit-bits for Children and Recreaions for the young amusing and instructive. The Magazine thus fulfils the object with which it has been converted into a children's Journal.—*The Hindu*, 28*th July*, 1914.

"THE VIVEKACHINTAMANI" Children's Supplement:—The July issue of this widely circulated Tamil Journal contains a special supplement which is devoted to the passing away H. E. Lady Hardinge, and the report of the proceedings of the Children's Meeting held on the 14th July, and the address of condolence in Tamil, adopted by the children assembled. There are other articles on various subject which are instructive and amusing.—*The Madras Times*, 23*rd July*, 1914.

"THE VIVEKACHINTAMANI CHILDREN'S SPECIAL".—

The July issue of this popular Tamil journal contains a special supplement under the above heading, which is devoted to the Children's gatherings on the passing away of H. E. Lady Hardinge. The address of condolence adopted by them in Tamil is given in full, and we learn that an English version of the children's pathetic and touching message has been submitted to H. E. the Viceroy. There are other articles on various subjects which are instructive and amusing, and calculated to imbue children with those ideals of social service which are essential to produce a healthy tone and character."—*The Madras Mail*, 25th July 1914.

---

"The July issue of this journal has a number of articles of varied interest all of which are written in easy flowing Tamil to suit the requirements of children who have cultivated their mother-tongue. It devotes a large amount of space for the delectation of young minds and has this month added to it a special supplement under the above heading which has a touching tale to tell of the feelings of children on the passing away of H. E. Lady Hardinge. The children's address adopted by the children assembled is given in full and we understand that an English version of the same has since been sent to H. E. the Viceroy personally through the Military Secretary. The magazine has now established its claim to be "the children's favourite, the teacher's help and the parent's guide," and it aims at imbuing the minds of children with those ideals of social service which are essential to produce a healthy tone and stable character in the natural development of the child-mind which is intuitively active and responsive to every impulse from within and from without."—*The Indian Patriot*, 25th July 1914.

---